பொருளடக்கம்

# இறைவழியில் இறைநேசர்கள்



ஆக்கம்:

மௌலவி அல்ஹாஃபிழ் அஃப்பழலுல் உலமா

**M.ஷைகு அப்துல்லாஹ் ஜமாலி M.A.**

(தலைவர், சுன்னத் ஜமாஅத் ஐக்கியப் பேரவை)


வெளியீடு

**குப்ரா மஜீத் பதிப்பகம்**

மஸ்ஜித் முபாரக்

16, பில்கிங்டன் ரோடு

அயனாவரம், சென்னை-23

செல்: 9841111367

நூலின் பெயர் : இறைவழியில் இறைநேசர்கள்
பக்கம் : 80
மொழி : தமிழ்
ஆசிரியர் : M.ஷைகு அப்துல்லாஹ் ஜமாலி M.A.
முகவரி: மஸ்ஜித் முபாரக்
16, பில்கிங்டன் ரோடு
அயனாவரம், சென்னை–23
செல்: 9841111367
பதிப்பு: மே 2010
பிரதிகள்: 3000
விலை: 30

அச்சு அமைப்பு:
A. ஷாஹுல் ஹமீது பாஜில் ஜமாலி M.A.
நூன் இன்ஸ்டியூட்., சென்னை–12,
செல்: 99418 21131

# சமர்ப்பணம்

உயிரினும் மேலான கண்மணி நாயகம்

ஆசிய ஒளிவிளக்கு அஜ்மீர் நாயகம்

நானிலம் போற்றும் நாகூர் நாயகம்

மல்லிகை மாநகருக்கு மனம் சேர்க்கும்

கஞ்ஜாலி தங்கள்

ஆகியோருக்கு

இந்நூல்

காணிக்கை



# பொருளடக்கம்



## இந்நூலில் உள்ளவை:

* மாநபி மீது மவ்லிது ஓதுவோம்

* இறைநேசர் மவ்லிதை இனிதாய் ஓதுவோம்

* வலிமார்கள் நம் வசீலா

* நேசன் தன் நேசர்களோடு...

* வலிமார்கள் [இறைநேசர்கள்] யார்?

* இறைநேசர்களின் அற்புதங்கள்

* மறைந்து வாழும் இறைநேசர்கள்

* கரம் பிடித்து கரை சேர்வோம்

# பொருளடக்கம்


| தலைப்பு | பக்கம் |
|---|---|
| **மாநபிமீது மவ்லிது ஓதுவோம்** | 7 |
| மவ்லிது என்றால் என்ன? | 7 |
| மவ்லிதிற்கு ஆதாரம் | 7 |
| அப்துல்லாஹ் இப்னு ரவாஹா ரலியல் லாஹு அன்ஹு அவர்கள் ஓதிய மவ்லித் | 8 |
| சஹாபா பெருமக்கள் ஓதிய மவ்லித் | 9 |
| ஹஸ்ஸான் இப்னு ஸாபித் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஓதிய மவ்லித் | 9 |
| கஃப் இப்னு ஜுஹைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஓதிய மவ்லித் | 10 |
| மவ்லித் ஓதுவதின் பலன்கள் | 11 |
| மவ்லித் ஓதுவது நன்மை தரும் நற்செயல் | 13 |
| பள்ளிவாசலில் மவ்லித் | 14 |
| மவ்லித் ஓதுவோருக்கு மரியாதை | 15 |
| **இறைநேசர் மவ்லிதை இனிதாய் ஓதுவோம்** | 16 |
| மவ்லித் என்பதன் பொருள் | 16 |
| வலிமார்கள் மவ்லிதிற்கு சான்றுகள் | 16 |
| சிறப்புகள் | 17 |
| அற்புதங்கள் | 18 |
| பத்ர் மவ்லித் | 19 |
| முஹாஜிர்–அன்ஸார் மவ்லித் | 20 |
| ஸித்தீகா மவ்லித் | 21 |
| மவ்லித் ஓதுவதின் பலன்கள் | 21 |
| பள்ளிவாசலில் மவ்லித் | 23 |
| **வலிமார்கள் நம் வசீலா** | 25 |

# பொருளடக்கம்




| | |
|---|---|
| **நேசன் தன் நேசர்களோடு...** | 33 |
| **வலிமார்கள் [இறைநேசர்கள்] யார்?** | 37 |
| **இறைநேசர்களின் அற்புதங்கள்** | 43 |
| பருவமற்ற காலத்திலும் பழவகைகள் | 43 |
| இருள் விலக்கிய அகல் விளக்கு | 44 |
| மண்ணறையில் மறை ஓதுதல் | 45 |
| மண்ணறையில் பேரொளி | 46 |
| அர்ஷ் அசைந்தது | 46 |
| எல்லைதாண்டிய பார்வை | 47 |
| வயிற்றிலுள்ள குழந்தை ஆணா? பெண்ணா? | 48 |
| மரணத்தை அறிந்த மாண்பாளர்கள் | 49 |
| வலிமார்கள் வகைகள் | 52 |
| **மறைந்து வாழும் இறைநேசர்கள்** | 57 |
| மண் தீண்டா புனித உடல் | 58 |
| மண்ணறையில் தொழுகை | 61 |
| கப்ரில் குர்ஆன் | 62 |
| இவ்வுலகிற்கு வருகை தரும் இறை நேசர்கள் | 63 |
| மறைந்த நல்லோர்களின் வாழ்த்தும் பிரார்த்தனையும் | 65 |
| சலாமும் சலாமுக்கு பதிலும் | 66 |
| இறந்தோரின் சந்திப்பு | 68 |
| கேட்பதும் பார்ப்பதும் | 70 |
| **கரம் பிடித்து கரை சேர்வோம்** | 73 |
| மன அமைதியும் ஈடில்லா வெற்றியும் | 74 |
| இறைத்தூதரின் பைஅத் இறைவனுடையதே | 74 |
| நபித்தோழர்கள் பெற்ற பைஅத் | 75 |
| சிறுவர்களுக்கு பைஅத் கொடுக்கலாமா? | 76 |
| பெண்களுக்கு பைஅத் | 78 |

# மாநபி மீது மவ்லிது ஓதுவோம்

## மவ்லிது என்றால் என்ன?

மவ்லிது என்ற சொல்லுக்கு அரபுமொழியில் பிறப்பு என்று பொருளாகும். இஸ்லாமியர்களின் வழக்கில் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பு மற்றும் சிறப்புகளை கவிநடையில் புகழ்வதற்கு மவ்லித் என்று கூறப்படும்.

## மவ்லிதிற்கு ஆதாரம்:

உலகிலுள்ள கோடானுகோடி முஸ்லிம்கள் ஓதி வருகின்ற மவ்லிதிற்கு திருக்குர்ஆனும் நபிமொழியும் சான்றுகளாக உள்ளன.

**குர்ஆன்:** இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பைப் பற்றிய விவரங்கள், அவர்களின் மகத்துவங்கள் மற்றும் மாண்புகள் மவ்லிதில் கூறப்பட்டுள்ளன. இவற்றிற்கு சான்றாக குர்ஆன் அமைந்துள்ளது.

ஏனென்றால், பல்வேறு இறைத்தூதர்களின் பிறப்பு பற்றி குர்ஆனில் தெரிவிக்கப்பட்டுள்ளது. உதாரணமாக:

* மூசா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிறப்பு
*(அல்குர்ஆன் 28:7)*

* யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிறப்பு
*(அல்குர்ஆன் 19: 7.15)*

* ஈசா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிறப்பு
*(அல்குர்ஆன் 19: 19, 33)*

* முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பு *(அல்குர்ஆன் 3:81, 61:6)*

நாயகக் கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை குர்ஆனில் பல இடங்களில் இறைவன் புகழ்ந்து பேசுகிறான். உதாரணமாக,

﴾وَإِنَّكَ لَعَلَى خُلُقٍ عَظِيمٍ﴿

(நபியே) திண்ணமாக நீங்கள் மேலான நற்குணத்தில் இருக்கிறீர்கள். *(அல்குர்ஆன் 68:4)*

﴾وَرَفَعْنَا لَكَ ذِكْرَكَ﴿

(நபியே) உங்கள் மகிமையை நாம் உயர்த்தியுள்ளோம். *(அல்குர்ஆன் 94:4)*

وَمَا أَرْسَلْنَاكَ إِلاَّ رَحْمَةً لِلْعَالَمِينَ

(நபியே) அகிலத்தாருக்கு அருட்கொடையாகவே உங்களை நாம் அனுப்பியுள்ளோம். *(அல்குர்ஆன் 21:107)*

**ஹதீஸ்:**

## அப்துல்லாஹ் இப்னு ரவாஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஓதிய மவ்லித்:

وَفِينَا رَسُولُ اللّٰهِ يَتْلُو كِتَابَهُ * إِذَا انْشَقَّ مَعْرُوفٌ مِنَ الْفَجْرِ سَاطِعُ
أَرَانَا الْهُدَى بَعْدَ الْعَمَى فَقُلُوبُنَا * بِهِ مُوقِنَاتٌ أَنَّ مَا قَالَ وَاقِعُ
يَبِيتُ يُجَافِي جَنْبَهُ عَنْ فِرَاشِهِ * إِذَا اسْتَثْقَلَتْ بِالْمُشْرِكِينَ الْمَضَاجِعُ

1) எங்களிடையே அல்லாஹ்வின் தூதர் இருக்கிறார்கள். வைகறைப் பொழுது புலரும் நேரத்தில் அவர்கள் இறை வேதத்தை ஓதுகிறார்கள்.

2) குருட்டுத் தன்மையில் இருந்த எங்களுக்கு நேர்வழி காட்டினார்கள். அவர்கள் கூறியது நிச்சயம் நிகழும் என எங்கள் உள்ளங்கள் உறுதியாக நம்புகின்றன.

3) இரவில் இணைவைப்பாளர்கள் படுக்கையில் ஆழ்ந்து கிடக்கும்போது நபியவர்கள் படுக்கையிலிருந்து எழுந்து தொழுவார்கள்.
*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரீ எண்:1155*

## சஹாபா பெருமக்கள் ஓதிய மவ்லித்:

نَحْنُ الَّذِينَ بَايَعُوا مُحَمَّدَا * عَلَى الْجِهَادِ مَا بَقِينَا أَبَدَا

நாங்கள் உயிர்வாழும் காலமெல்லாம் புனிதப் போர் செய்வோமென முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒப்பந்தம் செய்து கொண்டவர்கள் நாங்கள்.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரீ எண்: 7201*

## ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஓதிய மவ்லித்:

هَجَوْتَ مُحَمَّدًا فَأَجَبْتُ عَنْهُ * وَعِنْدَ اللَّهِ فِي ذَاكَ الْجَزَاءُ
هَجَوْتَ مُحَمَّدًا بَرًّا حَنِيفًا * رَسُولَ اللَّهِ شِيمَتُهُ الْوَفَاءُ
وَقَالَ اللَّهُ قَدْ أَرْسَلْتُ عَبْدًا * يَقُولُ الْحَقَّ لَيْسَ بِهِ خَفَاءُ

1) இறைமறுப்பாளர்களே!) முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறைவுபடுத்தி கவி பாடுகிறீர்கள். அதற்குப் பதிலாக அவர்களை நான் புகழ்ந்து பாடுவேன். அதற்குரிய நற்கூலி இறைவனிடமுண்டு.

2) நல்லவராகவும் நேரிய வழியில் உள்ளவராகவும் இருக்கிற இறைத்தூதர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை குறைவுபடுத்திப் பேசுகிறீர்கள். வாக்குறுதியை நிறைவேற்றுவது அவர்களின் அழகிய குணமாகும்.

3) அவர்கள் விஷயத்தில் இறைவன் கூறினான்: சத்தியத்தைக் கூறுகிற ஓர் அடியாரை திருத் தூதராக அனுப்பியுள்ளேன். அதில் எந்த ஒளிவு மறைவும் இல்லை.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா), நூல்: முஸ்லிம் எண்: 4545*

## கஃப் இப்னு ஜுஹைர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஓதிய மவ்லித்:

وَالْعَفْوُ عِنْدَ رَسُولِ اللهِ مَأْمُولُ * فَقَدْ أَتَيْتُ رَسُولَ اللهِ مُعْتَذِرًا
وَالْعُذْرُ عِنْدَ رَسُولِ اللهِ مَقْبُولُ * إِنَّ الرَّسُولَ لَنُورٌ يُسْتَضَاءُ بِهِ
وَصَارِمٌ مِنْ سُيُوفِ اللهِ مَسْلُولُ

1) இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனக்கு எச்சரிக்கை விடுத்துள்ளார்களென எனக்கு தெரிவிக்கப்பட்டது. மன்னிப்பு என்பது இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம்

எதிர்பார்க்கப்பட்ட ஒன்றே.

2) மன்னிப்புத் தேடியவனாக இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் நான் வந்தேன். அம்மன்னிப்பு இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒப்புக்கொள்ளப்பட்டது.

3) திண்ணமாக இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒளி கொடுக்கும் பேரொளியாகவும் இறைவனின் வாட்களில் உருவியவாளாகவும் உள்ளார்கள்.

*அறிவிப்பாளர்: ஆஸிம் இப்னு உமர் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: ஹாகிம் எண்: 6558*

## மவ்லித் ஓதுவதின் பலன்கள்:

மவ்லித் ஓதக்கூடியவர்களுக்கு மலக்குமார்களைக் கொண்டு பாதுகாப்பு அரணை இறைவன் ஏற்படுத்திக் கொடுக்கிறான். இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் புகழ்ந்ததால் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உறுதுணை அவர்களுக்கு கிடைத்தது.

عَنْ حَسَّانَ بْنَ ثَابِت قَالَ قَالَ رَسُول اللَّه صَلَّى اللَّهُ عَلَيْه وَسَلَّمَ
اللَّهُمَّ أَيِّدْهُ بِرُوحِ الْقُدُسِ.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (பிராத்தனையில்) கூறினார்கள்: இறைவா! தூய ஆன்மா (ஜிப்ரீல்) மூலம் ஹஸ்ஸானைப் பலப்படுத்துவாயாக!

*அறிவிப்பாளர்: ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரி எண்: 434)*

عَنْ عائشة قالتْ فسمعتُ رسُول اللهِ صلّى اللهُ عليْهِ وسلّم يقُولُ لحسّان إنّ رُوحَ القُدُس لا يزالُ يُؤيِّدُكَ ما نافحْتَ عَنْ اللهِ ورسُولِهِ.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஸ்ஸான் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு கூறினார்கள்: (ஹஸ்ஸானே) நீங்கள் இறைவனுக்காகவும், இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காகவும் கவிபாடும் காலமெல்லாம் பரிசுத்த ஆன்மாவான ஜிப்ரீல் (அலைஹிஸ்ஸலாம்) உங்களை பலப்படுத்திக் கொண்டேயிருப்பார்கள்.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா), நூல்: முஸ்லிம் எண்: 4545*

**இறைவன் கூறினான்:**

إِنَّ اللهَ وَمَلَائِكَتَهُ يُصَلُّونَ عَلَى النَّبِيِّ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا

திண்ணமாக இறைவனும், அவனுடைய மலக்குகளும் நபி மீது ஸலவாத் சொல்கிறார்கள். இறைநம்பிக்கையாளர்களே! அந்த நபி மீது நீங்களும் ஸலவாத் சொல்லுங்கள்; சலாமும் கூறுங்கள்.

*(அல்குர்ஆன் 33:56)*

நம் உயிரினும் மேலான நாயகக் கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறி இறைவனது கட்டளையை நிறைவேற்றுகின்ற நல்வாய்ப்பு மவ்லித் ஓதுவதின் மூலம் கிட்டுகிறது.

عَنْ عَبْدِ اللهِ بْنِ مَسْعُودٍ قَالَ قَالَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ لِلَّهِ مَلَائِكَةً سَيَّاحِينَ فِي الْأَرْضِ يُبَلِّغُونِي مِنْ أُمَّتِي السَّلَامَ.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்விற்கு மண்ணுலகில் சுற்றிவரும் மலக்குகள் இருக்கிறார்கள். என் உம்மத்தினர் கூறும் ஸலாமை அவர்கள் என்னிடம் தெரிவிக்கிறார்கள்.

*அறிவிப்பாளர்: இப்னு மஸ்வூத் (ரலியல்லாஹு அன்ஹு).*
*நூல் நஸாயீ எண்: 1265*

மவ்லித் ஓதப்படும் இடத்திற்கு மலக்குகளின் வருகையும், ஓதுவோரின் பெயர்கள் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சமூகத்தில் தெரிவிக்கப்படும் நற்பேறும் கிடைக்கிறது

## மவ்லித் ஓதுவது நன்மை தரும் நற்செயல்:

தொழுகை நோன்பு, தர்மம், குர்ஆன் ஓதுதல் மற்றும் பிறர்க்கு உதவுதல் போன்ற நற்செயல்கள் புரிந்தால் எவ்வாறு இறைவனிடமிருந்து நன்மை கிடைக்குமோ அதுபோன்று மவ்லித் ஓதுகின்றபோது நன்மைகளை இறைவன் நமக்கு அள்ளித்தருகிறான்.

عن عائشة قالت قال حسان هجوت محمدا فأجبت عنه وعند الله في ذاك الجزاء .

ஹஸ்ஸான் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் கூறினார்கள்:

(இறைமறுப்பாளர்களே!) முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை குறைவுபடுத்தி கவிபாடுகிறீர்கள். அதற்கு பதிலளிக்கும் வகையில் அவர்களை நான் புகழ்ந்து பாடுவேன். அல்லாஹ்விடம் அதற்குரிய நற்கூலியுண்டு.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா), நூல்: முஸ்லிம் எண்: 4545*

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَرَّ بِبَعْضِ الْمَدِينَةِ
فَإِذَا هُوَ بِجَوَارٍ يَضْرِبْنَ بِدُفِّهِنَّ وَيَتَغَنَّيْنَ وَيَقُلْنَ:
نَحْنُ جَوَارٍ مِنْ بَنِي النَّجَّارِ يَا حَبَّذَا مُحَمَّدٌ مِنْ جَارِ
فَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَعْلَمُ اللَّهُ إِنِّي لَأُحِبُّكُنَّ (ابن ماجه)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவின் ஒரு பகுதிக்குச் சென்றார்கள். அப்போது சில சிறுமிகள் தஃப் அடித்து பாட்டுப்பாடிக் கொண்டிருந்தார்கள். (அவற்றில் ஒன்று:)

நாங்கள் பனூ நஜ்ஜார் குடும்பத்தைச் சார்ந்த சிறுமிகள். முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சிறந்த அண்டை வீட்டுக்காரர் ஆவார்கள்.

(இதைக்கேட்ட) நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

திண்ணமாக நான் உங்களை நேசிக்கிறேன். (இதை) அல்லாஹ் அறிகிறான்.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: இப்னுமாஜா எண்: 1889*

## பள்ளிவாசலில் மவ்லித்:

عَن ابن جدعان قال : أنشد كعب بن زهير بن أبي سلمى رسولَ الله
صلى الله عليه وسلم في المسجد (الحاكم)

கஃபு இப்னு ஜுஹைர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் பள்ளிவாசலில் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் புகழ்ந்து படித்தார்கள்.

*அறிவிப்பாளர்: இப்னு ஜத்ஆன் (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: ஹாகிம் எண்: 6555*

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ عُمَرَ مَرَّ بِحَسَّانَ وَهُوَ يُنْشِدُ الشِّعْرَ فِي الْمَسْجِدِ فَلَحَظَ إِلَيْهِ فَقَالَ قَدْ كُنْتُ أُنْشِدُ وَفِيهِ مَنْ هُوَ خَيْرٌ مِنْكَ (رواه البخاري ومسلم واللفظ له)

பள்ளிவாசலில் ஹஸ்ஸான் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் கவிபாடிக் கொண்டிருந்தபோது அங்கு சென்ற உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் கடைக்கண் பார்வையால் பார்த்தார்கள். அப்போது ஹஸ்ஸான் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் சொன்னார்கள்:

உங்களைவிட சிறந்தவரான இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருந்தபோதே இப்பள்ளிவாசலில் கவிபாடியுள்ளேன்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரீ எண்: 3212, முஸ்லிம் எண்: 4539*

## மவ்லித் ஓதுவோருக்கு மரியாதை:

عَنْ عَائِشَةَ قَالَتْ كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَضَعُ لِحَسَّانَ مِنْبَرًا فِي الْمَسْجِدِ يَقُومُ عَلَيْهِ قَائِمًا يُفَاخِرُ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஸ்ஸான் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு பள்ளிவாசலில் ஒரு மிம்பரை அமைத்துக் கொடுத்தார்கள். அதிலே அவர் ஏறி நின்று, இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையே புகழ்வார்கள்.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா), நூல்: திர்மிதீ எண்: 2773*

இறைநம்பிக்கையாளர்களே! பெருமானார் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழ்பாடி புனிதம் பெற்று ஈருலகிலும் வளமாய் வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் வழங்குவானாக! ஆமீன்!!

# இறைநேசர் மவ்லிதை இனிதாய் ஓதுவோம்

## மவ்லித் என்புதன் பொருள்:

மவ்லித் எனும் வார்த்தைக்கு அரபி மொழியில் பிறப்பு என்று பொருளாகும். இஸ்லாமியர்களின் சொல்வழக்கில் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் - இறைநேசர்கள் ஆகியோரின் பிறப்பு, வாழ்க்கை வரலாறு, அருமை பெருமைகள், மகிமை மாண்புகள் மற்றும் அவர்கள் நிகழ்த்திய அற்புதங்கள் ஆகியவற்றை கவிநடையில் புகழ்வதற்கு மவ்லித் என்று கூறப்படும்.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை புகழ்ந்துரைக்கும் சுப்ஹான மவ்லிதை யும், வலிமார்கள் புகழ்பாடும் பத்ரு மவ்லித் - முஹ்யித்தீன் மவ்லித் - ஷாஹுல் ஹமீத் மவ்லித் போன்றவற்றையும் இஸ்லாமியர்கள் புண்ணியம் கருதி புனிதத்துடன் ஓதி வருகின்றனர்.

## வலிமார்கள் மவ்லிதிற்கு சான்றுகள்:

மாண்பும் மகுத்துவமும் நிறைந்த வலிமார்கள் மவ்லிதை முஸ்லிம்கள் ஓதுவதற்கு அருள்மறையாம் குர்ஆனும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பொன் மொழிகளும் சான்று களாக அமைந்துள்ளன.

### குர்ஆன்:

இறைநேசர்களின் வாழ்க்கை வரலாறு, மாண்புயர் சிறப்புகள் மற்றும் வியத்தகு அற்புதங்கள் மவ்லிதில்

கூறப்பட்டுள்ளன. இதற்கு குர்ஆன் ஆதாரமாக உள்ளது.

மர்யம் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் வாழ்க்கை வரலாறு. *(அல்குர்ஆன், 3:35–47, 19:16–29)*

இஸ்கன்தர் துல்கர்னைன் அவர்களின் வாழ்க்கை வரலாறு. *(அல்குர்ஆன்: 18:83–98)*

ஃகிழ்ர் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் வாழ்க்கை வரலாறு. *(அல்குர்ஆன்: 18:65–82)*

குகைத் தோழர்கள் வாழ்க்கை வரலாறு. *(அல்குர்ஆன்: 18:9–25)*

## சிறப்புகள்:

أَلاَ إِنَّ أَوْلِيَاءَ اللهِ لاَ خَوْفٌ عَلَيْهِمْ وَلاَ هُمْ يَحْزَنُونَ

கவனமாகக் கேளுங்கள்! திண்ணமாக, அல்லாஹ்வின் நேசர்களுக்கு எப்பயமும் இல்லை. அவர்கள் கவலை கொள்ளவும் மாட்டார்கள். *(அல்குர்ஆன்: 10:62)*

إِنَّ الَّذِينَ قَالُوا رَبُّنَا اللهُ ثُمَّ اسْتَقَامُوا فَلاَ خَوْفٌ عَلَيْهِمْ وَلاَ هُمْ يَحْزَنُونَ * أُولَئِكَ أَصْحَابُ الْجَنَّةِ خَالِدِينَ فِيهَا جَزَاءً بِمَا كَانُوا يَعْمَلُونَ

திண்ணமாக, எங்கள் இறைவன் அல்லாஹ்வே எனக் கூறி பிறகு (அதிலே) நிலைத்திருந்தவர்களுக்கு எந்த பயமும் இல்லை. அவர்கள் கவலை கொள்ளவும் மாட்டார்கள்.

அத்தகையவர்களே சுவர்க்கவாசிகள். அவர்கள் செய்தவற்றிற்கு நற்கூலியாக அதிலே அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். *(அல்குர்ஆன்: 46:13,14)*

## அற்புதங்கள்:

பருவமில்லாத காலத்திலும் மர்யம் அலைஹிஸ் ஸலாம் அவர்களுக்குக் கிடைத்த கனிவர்க்கங்கள்.

*(பார்க்க: அல்குர்ஆன் 3:37)*

சுலைமான் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் அவையிலிருந்த ஞானம் பெற்ற ஓர் இறைநேசர் பன்னூற்றுக் கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்த பல்கீஸ் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் சிம்மாசனத்தை கண்ணிமைக்கும் நேரத்தில் கொண்டு வந்த அற்புதம். *(பார்க்க: அல்குர்ஆன் 27:38–40)*

முன்னூறு வருடங்களுக்கு மேலாக உறங்கிய குகைத் தோழர்களுக்கு நிகழ்ந்த அற்புதம்.

*(பார்க்க: அல்குர்ஆன் 18:9–25)*

இறைநேசர்களின் வாழ்க்கை வரலாறு, சிறப்புகள் மற்றும் அற்புதங்களைக் கூறி அவர்களைப் புகழ்ந்துரைக்கலாமென்பதை மேற்கண்ட குர்ஆன் வசனங்கள் தெள்ளத்தெளிவாக எடுத்தியம்புகின்றன.

## ஹதீஸ்:

عَنْ ابْنِ عُمَرَ أَنَّ رَسُولَ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: اذْكُرُوا مَحَاسِنَ مَوْتَاكُمْ وَكُفُّوا عَنْ مَسَاوِيهِمْ (الترمذي وأبوداود)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: உங்களில் முன்சென்றோர்களின் நல்லவைகளை எடுத்துக் கூறுங்கள்!

*அறிவிப்பாளர்: இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு.ஸல்லல்லாஹு, நூல்கள்: திர்மிதீ எண்: 940, அபூதாவூத் எண்: 4254*

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ يَقُولُ مَرُّوا بِجَنَازَةٍ فَأَثْنَوْا عَلَيْهَا خَيْرًا فَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَجَبَتْ فَقَالَ عُمَرُ بْنُ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ مَا وَجَبَتْ قَالَ هَذَا أَثْنَيْتُمْ عَلَيْهِ خَيْرًا فَوَجَبَتْ لَهُ الْجَنَّةُ (البخاري ومسلم)

ஜனாஸாவைக் கடந்து சென்ற (அருமைத் தோழர்கள்) புகழ்ந்து பேசினார்கள். இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸலலம் அவர்கள், கடமையாகி விட்டது என்று கூறினார்கள். எது கடமையானது என்று உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வினவியபோது, இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதிலுரைத்தார்கள்:

இறந்துபோன இம்மனிதரை நீங்கள் புகழ்ந்தீர்கள். எனவே, அவருக்கு சொர்க்கம் கடமையாகிவிட்டது.

*அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு, நூல்கள்: புகாரீ: 1278, முஸ்லிம்: 1578*

## பத்ர் மவ்லித்

عَنْ الرُّبَيِّعِ بِنْتِ مُعَوِّذِ ابْنِ عَفْرَاءَ قَالَتْ دَخَلَ عَلَيَّ النبي صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ غَداةَ بُنِيَ عَلَيَّ وجُوَيْرِيَاتٌ يَضْرِبْنَ بدُفٍّ يَنْدُبْنَ مَنْ قُتِلَ مِنْ آبَائِهِنَّ يوم بدر

(رواه البخاري وأبوداود والترمذي)

எனது திருமண வைபவத்தின்போது இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனது இல்லம் வந்தார்கள். அந்த நேரத்தில் சிறுமிகள் பத்ர் போரில் ஷஹீதான முன்னோர்களை புகழ்ந்துபாடி தஃப் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

அறிவிப்பாளர்: ருபய்யிஃ பின்த் முஅவ்வித் ரலியல்லாஹு அன்ஹு, நூல்கள்: புகாரீ: 3700, திர்மிதீ: 1010, அபூதாவூத்: 4276

## முஹாஜிர்-அன்ஸார் மவ்லித்:

اللّٰهُمَّ إِنَّ الْعَيْشَ عَيْشُ الآخِرَةْ   فَاغْفِرْ لِلأَنْصَارِ وَالْمُهَاجِرَةْ

اللهم إنه لا خير إلا خير الآخرة   فبارك في الأنصار والمهاجره

اللهم لا عيش إلا عيش الآخرة   فأكرم الأنصار والمهاجره

اللهم إن الأجر أجر الآخرة   فأرحم الأنصار والمهاجره

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஹாஜிர் மற்றும் அன்ஸார் தோழர்களுக்கு பிரார்த்தனை செய்து கவிபடித்தார்கள்:

திண்ணமாக, வாழ்வு என்பது மறுமையின் வாழ்வுதான். இறைவனே! அன்ஸார்-முஹாஜிர் தோழர்களை மன்னிப்பாயாக!

நிச்சயமாக மறுமை நலனைத்தவிர வேறு எந்த நலனும் கிடையாது. இறைவனே! அன்ஸார்-முஹாஜிர் தோழர்களுக்கு பரகத் (அபிவிருத்தி) செய்வாயாக!

உறுதியாக மறுமை வாழ்வைத் தவிர வேறு எந்த வாழ்வுமில்லை. இறைவனே! அன்ஸார்-முஹாஜிர் தோழர்களை கண்ணியப்படுத்துவாயாக!

திண்ணமாக, நற்கூலி என்றாலே மறுமையின் நற்கூலிதான். இறைவனே! அன்ஹார்-முஹாஜிர் தோழர்களுக்கு கருணை புரிவாயாக!

*அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரீ: 2622, 2623, 2741, 3616*

## ஸித்தீகா மவ்லித்:

عَنْ مَسْرُوقٍ قَالَ دَخَلْنَا عَلَى عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا وَعِنْدَهَا حَسَّانُ بْنُ ثَابِتٍ يُنْشِدُهَا شِعْرًا يُشَبِّبُ بِأَبْيَاتٍ لَهُ وَقَالَ: حَصَانٌ رَزَانٌ مَا تُزَنُّ بِرِيبَةٍ وَتُصْبِحُ غَرْثَى مِنْ لُحُومِ الْغَوَافِلِ (رواه البخاري ومسلم)

நாங்கள் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை சந்திக்க சென்றோம். அப்போது ஹஸ்ஸான் இப்னு ஃதாபித் ரலியல்லாஹு அன்ஹு தனது கவிகளின் மூலம் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை புகழ்ந்து பாடிக்கொண்டிருந்தார். (அவற்றில் ஒன்று)

ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா நல்லொழுக்கமும் நுண்ணறிவுமிக்கவர். ஐயத்திற்கு அப்பாற்பட்டவர்கள். எந்தவொரு பெண்ணைப்பற்றியும் தவறாகப் பேசமாட்டார்கள்.

*அறிவிப்பாளர்: மஸ்ரூக் ரலியல்லாஹு அன்ஹு, நூல்கள்: புகாரீ: 3831, முஸ்லிம்: 4543*

## மவ்லித் ஓதுவதின் பலன்கள்:

மவ்லித் ஓதக்கூடியவர்களுக்கு மலக்குமார்களைக் கொண்டு பாதுகாப்பு அரணை இறைவன் ஏற்படுத்திக் கொடுக்கிறான்.

عَنْ عَائِشَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لِحَسَّانَ إِنَّ رُوحَ الْقُدُسِ لاَ يَزَالُ يُؤَيِّدُكَ مَا نَافَحْتَ عَنْ اللَّهِ وَرَسُولِهِ (رواه مسلم)

பொருளடக்கம்

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஸ்ஸான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்குக் கூறினார்கள்:

நீங்கள் இறைவனுக்காகவும் இறைத்தூதர் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காகவும் கவி பாடும் காலமெல்லாம் பரிசுத்த ஆன்மா(வான ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம்) உங்களைப் பலப்படுத்திக் கொண்டேயிருப்பார்கள்.

*அறிவிப்பாளர்: ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, நூல்: முஸ்லிம் எண்: 4545*

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَرَّ بِبَعْضِ الْمَدِينَةِ
فَإِذَا هُوَ بِجَوَارٍ يَضْرِبْنَ بِدُفِّهِنَّ وَيَتَغَنَّيْنَ وَيَقُلْنَ:
نَحْنُ جَوَارٍ مِنْ بَنِي النَّجَّارِ
يَا حَبَّذَا مُحَمَّدٌ مِنْ جَارِ
فَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَعْلَمُ اللَّهُ إِنِّي لَأُحِبُّكُنَّ (ابن ماجه)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவின் ஒரு பகுதிக்குச் சென்றார்கள். அங்கே சில சிறுமிகள் தஃப் அடித்து பாட்டுப் பாடிக் கொண்டிருந்தார்கள். (அவற்றில் ஒன்று:)

நாங்கள் பனூ நஜ்ஜார் குடும்பத்தைச் சார்ந்த சிறுமி கள். முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சிறந்த அண்டை வீட்டுக்காரர் ஆவார்கள்.

(இதைக் கேட்ட நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

திண்ணமாக நான் உங்களை நேசிக்கிறேன். (இதை) அல்லாஹ் அறிகிறான்.

*அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: இப்னுமாஜா எண்: 1889*

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் புகழ்வது அவர்களின் நேசத்தைப் பெற்றுத்தரும் என்ற கருத்தை மேற்கண்ட ஹதீஸ் அறிவிக்கிறது. இந்த ஆதாரத்தின் அடிப்படையில் இறைநேசர்களைப் புகழ்ந்தால் அவர்களின் அன்பும் நேசமும் நிச்சயம் கிட்டுமென்று நம்மால் அறிந்து கொள்ள முடியும்.

## பள்ளிவாசலில் மவ்லித்:

عَن ابن جدعان قال : أنشد كعب بن زهير بن أبي سلمى رسولَ الله صلى الله عليه وسلم في المسجد (الحاكم)

கஃபு இப்னு ஜுஹைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பள்ளிவாசலில் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் புகழ்ந்து படித்தார்கள்.

*அறிவிப்பாளர்: இப்னு ஜத்ஆன் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: ஹாகிம் எண்: 6555*

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ عُمَرَ مَرَّ بِحَسَّانَ وَهُوَ يُنْشِدُ الشِّعْرَ فِي الْمَسْجِدِ فَلَحَظَ إِلَيْهِ فَقَالَ قَدْ كُنْتُ أُنْشِدُ وَفِيهِ مَنْ هُوَ خَيْرٌ مِنْكَ (رواه البخاري ومسلم واللفظ له)

பள்ளிவாசலில் ஹஸ்ஸான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கவிபாடிக் கொண்டிருந்தபோது அங்கு சென்ற உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கடைக்கண்

பார்வையால் பார்த்தார்கள். அப்போது ஹஸ்ஸான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள்:

உங்களைவிட சிறந்தவரான இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருந்தபோதே இப்பள்ளிவாசலில் கவிபாடியுள்ளேன்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு, நூல்கள்: புகாரீ எண்: 2973, முஸ்லிம் எண்: 4539*

عَنْ عَائِشَةَ قَالَتْ كَانَ رَسُولُ اللَّه صَلَّى اللَّهُ عَلَيْه وَسَلَّمَ يَضَعُ لِحَسَّانَ مِنْبَرًا فِي الْمَسْجِد يَقُومُ عَلَيْه قَائِمًا يُفَاخِرُ عَنْ رَسُولِ اللَّه صَلَّى اللَّهُ عَلَيْه وَسَلَّمَ (الترمذي)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஸ்ஸான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பள்ளிவாசலில் ஒரு மிம்பரை அமைத்துக் கொடுத்தார்கள். அதிலே அவர்கள் ஏறி நின்று இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையே புகழ்வார்.

*அறிவிப்பாளர்: ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, நூல்: திர்மிதீ எண்: 2773*

இறைநம்பிக்கையாளர்களே! இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மற்றும் இறைநேசர்களின் புகழ்பாடி புனிதம் பெற்று ஈருலகிலும் வளமாய் வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் வழங்குவானாக! ஆமீன்!!

# வலிமார்கள் நம் வசீலா

இறைவனிடம் பிரார்த்தனை செய்யும்போது நமது தேவைகளை வெறுமனே கேட்காமல் வசீலாவைக் கொண்டு கேட்க வேண்டும்.

இறைவன் கூறினான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللهَ وَابْتَغُوا إِلَيْهِ الْوَسِيلَةَ وَجَاهِدُوا فِي سَبِيلِهِ لَعَلَّكُمْ تُفْلِحُونَ

இறை நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! அவனை நெருங்க வஸீலாவை தேடுங்கள்! அவன் பாதையில் போர் புரியுங்கள்! நீங்கள் வெற்றி பெறுவீர்கள். *(அல்குர்ஆன் – 5:35)*

இஸ்லாமிய மார்க்கத்தில் வஸீலா இரு வகைப் படும்.

1. நல்வணக்கம். 2. நல்லடியார்.

இறைவன் கூறினான்:

وَمَا كَانَ اللهُ لِيُعَذِّبَهُمْ وَأَنْتَ فِيهِمْ وَمَا كَانَ اللهُ مُعَذِّبَهُمْ وَهُمْ يَسْتَغْفِرُونَ

(நபியே!) நீங்கள் அவர்களுடன் இருக்கும்போது அல்லாஹ் அவர்களை வேதனை செய்யமாட்டான். அவர்கள் பாவமன்னிப்புத் தேடும் நிலையிலும் அவர்களை அல்லாஹ் வேதனை செய்யமாட்டான். *(அல்குர்ஆன் – 8:33)*

மேற்கண்ட வசனத்தில் இறை தண்டனை ஏற்படா மலிருக்க இரு காரணிகளை இறைவன் கூறுகிறான்.

1. இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அம்மக்களுடன் இருப்பது.

2. அம்மக்கள் தங்களின் தவறுகள் மற்றும் பாவங் களுக்காக இறைவனிடம் மன்னிப்புக் கோருவது.

முதல் காரணி நல்லடியார் வஸீலா என்பதை பறை சாட்டுகிறது. இரண்டாம் காரணி நல்வணக்கம் வஸீலா என்பதை அடையாளப்படுத்துகிறது.

இறைவன் கூறினான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اسْتَعِينُوا بِالصَّبْرِ وَالصَّلَاةِ إِنَّ اللَّهَ مَعَ الصَّابِرِينَ

இறை நம்பிக்கையாளர்களே! தொழுகை மற்றும் பொறுமையின் மூலம் நீங்கள் உதவி தேடுங்கள்! இறைவன் பொறுமையாளர்களுடன் உள்ளான் என்பது திண்ணம். *(அல்குர்ஆன் – 2:153)*

தொழுகையென்பது ஒரு வணக்கம். அத்தொழுகை மூலம் என்னிடம் உதவி கேளுங்கள் என்று இறைவன் பணித்ததிலிருந்து நல்வணக்கம் ஓர் வஸீலா என்பதை புரிந்து கொள்கிறோம்.

இறைவன் கூறினான்:

وَأَمَّا الْجِدَارُ فَكَانَ لِغُلَامَيْنِ يَتِيمَيْنِ فِي الْمَدِينَةِ وَكَانَ تَحْتَهُ كَنْزٌ لَهُمَا وَكَانَ أَبُوهُمَا صَالِحًا فَأَرَادَ رَبُّكَ أَنْ يَبْلُغَا أَشُدَّهُمَا وَيَسْتَخْرِجَا كَنْزَهُمَا رَحْمَةً مِنْ رَبِّكَ وَمَا فَعَلْتُهُ عَنْ أَمْرِي ذَلِكَ تَأْوِيلُ مَا لَمْ تَسْطِعْ عَلَيْهِ صَبْرًا

மேலும், அந்தச் சுவர் அவ்வூரிலுள்ள இரு அநாதைச் சிறுவர்களுக்கு உரியது. அதன் கீழ் அவ்விருவருக்கு முரிய புதையல் இருந்தது. அவ்விருவரின் தந்தை நல்லடியாராகயிருந்தார். ஆகவே, அவ்விருவரும் வாலிப பருவமடைந்து தங்களின் புதையலை உமது இறைவனின் அருட்கொடையாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று உமது இறைவன் நாடினான். இதை நான் சுயமாக செய்யவில்லை. இதுவே உம்மால் பொறுமையாக இருக்க முடியாதவற்றுக்கான விளக்கமாகும். *(அல்குர்ஆன் – 18:82)*

இரு அநாதைச் சிறுவர்களுக்கும் ஹிழ்ர் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் வழியாக இறையுதவி கிட்டியது, அவ்விருவரின் தந்தை இறை நேசராக இருந்ததுதான் என்பதை மேற்கண்ட வசனம் சுட்டிக்காட்டுகிறது. இதன் மூலம் நல்லடியார்களும் வஸீலாவாக உள்ள னர் என்பதை தெளிவாக அறிந்துகொள்ள முடியும்.

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ أَنَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ كَانَ إِذَا قَحَطُوا اسْتَسْقَى بِالْعَبَّاسِ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ فَقَالَ اللَّهُمَّ إِنَّا كُنَّا نَتَوَسَّلُ إِلَيْكَ بِنَبِيِّنَا فَتَسْقِينَا وَإِنَّا نَتَوَسَّلُ إِلَيْكَ بِعَمِّ نَبِيِّنَا فَاسْقِنَا قَالَ فَيُسْقَوْنَ

மக்கள் பஞ்சத்தில் வாடும்போது அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் மூலம் மழை தேடும் வழமையுள்ளவர்களாக உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் இருந்தார்கள். (அப்போது) அவர்கள் கூறுவார்கள்:

இறைவனே! (முன்பு) எங்களின் நபியை வஸீலா வாக வைத்து உன்னிடம் மழை வேண்டினோம். நீயும்

எங்களுக்கு மழை பொழிந்தாய். (இப்போது) எங்கள் நபியின் சிறிய தந்தையை வஸீலாவாக வைத்து மழை வேண்டுகிறோம். எங்களுக்கு மழை பொழிவாயாக!

(உமர் – ரலியல்லாஹு அன்ஹு – அவர்கள் இவ்வாறு கூறியதற்குப் பின்) மழை பொழிந்தது.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு)*
*நூல்: புகாரீ ஹதீஸ் எண் 1010*

உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் தமது வாழ்க்கையில் பல்வேறு வணக்க வழிபாடுகளை நிறைவேற்றியவர்கள். அவ்வாறிருந்தும் அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களைக் கொண்டு அல்லாஹ்விடம் மழை வேண்டியிருக்கிறார்கள். நல்லடியார்களும் வஸீலாவே என்பதால்தான் இம்முறையை கடைபிடித்துள்ளார்கள். உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடம் இஸ்லாமிய பாடத்தை நேரடியாக பயின்றவர்களென்பது இங்கே குறிப்பிடத் தக்கது. மழையும் பொழிந்தது என்ற மேற்கண்ட ஹதீஸின் வாசகத்திலிருந்து நல்லடியார்கள் வஸீலா என்பதை இறைவனும் அங்கீகரித்துள்ளான் என்று தெளிவாகிறது.

عَنْ عُمَرُ إِنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَدْ قَالَ إِنَّ رَجُلاً يَأْتِيكُمْ مِنَ الْيَمَنِ يُقَالُ
لَهُ أُوَيْسٌ لاَ يَدَعُ بِالْيَمَنِ غَيْرَ أُمٍّ لَهُ قَدْ كَانَ بِهِ بَيَاضٌ فَدَعَا اللَّهَ فَأَذْهَبَهُ عَنْهُ إِلاَّ مَوْضِعَ
الدِّينَارِ أَوْ الدِّرْهَمِ فَمَنْ لَقِيَهُ مِنْكُمْ فَلْيَسْتَغْفِرْ لَكُمْ

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இயம்பினார்கள்:

(தோழர்களே!) யமன் நாட்டிலிருந்து உங்களிடம் ஒருவர் வருவார். அவரின் பெயர் உவைஸ் என்பதாகும். உங்களில் எவரேனும் அவரை சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றால் உங்களுக்காக பாவமன்னிப்பு தேடும்படி அவரிடம் கோரிக்கை வைக்கட்டும்!

*அறிவிப்பாளர்: உமர் (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: முஸ்லிம் ஹதீஸ் எண் 4612*

பாவங்களை பொறுத்தருள்பவன் இறைவன். கேளுங்கள்! தருகிறேனென குர்ஆனில் வாக்குறுதியும் வழங்குகிறான். இந்நிலையில் உவைஸுல் கர்னீ (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் மூலமாக இறைவனிடம் பாவமன்னிப்பை பெறுங்கள்! என்று கட்டளையிட்ட இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நல்லடியார் வஸீலா நமக்கு அவசியமென்பதை உணர்த்துகிறார்கள்.

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றார்கள்:

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَنْ خَرَجَ مِنْ بَيْتِهِ إِلَى الصَّلَاةِ فَقَالَ اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِحَقِّ السَّائِلِينَ عَلَيْكَ وَأَسْأَلُكَ بِحَقِّ مَمْشَايَ هَذَا فَإِنِّي لَمْ أَخْرُجْ أَشَرًا وَلَا بَطَرًا وَلَا رِيَاءً وَلَا سُمْعَةً وَخَرَجْتُ اتِّقَاءَ سُخْطِكَ وَابْتِغَاءَ مَرْضَاتِكَ فَأَسْأَلُكَ أَنْ تُعِيذَنِي مِنْ النَّارِ وَأَنْ تَغْفِرَ لِي ذُنُوبِي إِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ أَقْبَلَ اللَّهُ عَلَيْهِ بِوَجْهِهِ وَاسْتَغْفَرَ لَهُ سَبْعُونَ أَلْفَ مَلَكٍ

தொழுகைக்காக தனது வீட்டிலிருந்து புறப்பட்டவர் கீழ்க்காணும் பிரார்த்தனையைக் கூறினால் இறைவன் தன்முகம் கொண்டு அவரை முன்னோக்குகிறான். மேலும் அவருக்காக எழுபதாயிரம் மலக்கு

கள் பாவமன்னிப்புத் தேடுகிறார்கள்.

(அப்பிரார்த்தனை:) இறைவனே! உன்னிடம் பிரார்த்திப்போரின் பொருட்டால் கேட்கிறேன். எனது இந்த நடையின் பொருட்டாலும் கேட்கிறேன். திண்ணமாக, நான் பெருமைக்காகவோ பிறர் பாராட்ட வேண்டுமென்பதற்காகவோ நான் புறப்பட வில்லை. உன் கோபத்தை பயந்தும் உன் பொருத்தத் தைத் தேடியுமே நான் புறப்பட்டேன்.

நரகத்திலிருந்து என்னைப் பாதுகாக்கவும் எனது பாவங்களை மன்னிக்கவும் உன்னிடம் கேட்கின்றேன். உன்னைத் தவிர (வேறு எவரும்) பாவங்களை மன்னிக்க முடியாது.

*அறிவிப்பாளர்: அபூசஈதுல் குத்ரீ (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: இப்னுமாஜா – 770, அஹ்மத் – 10729*

நல்வணக்கம் மற்றும் நல்லடியார் இரண்டுமே வஸீலாதான் என்பதை மேற்கண்ட ஹதீஸில் இறைத் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அறிவுறுத்துகிறார்கள். பிரார்த்திப்போரின் பொருட் டால் எனும் வாக்கியம் நல்லடியார் வஸீலா என்பதை குறிக்கிறது. எனது நடையின் பொருட்டால் என்ற வாக்கியம் நல்வணக்கமும் வஸீலா என்பதை தெரிவிக்கிறது. இவ்விருவகைகளில் நல்லடியார் வஸீலா என்பதே இந்த ஹதீஸில் முற்படுத்தப்பட்டி ருக்கிறது என்ற விவரத்தை கவனத்தில் கொள்க!

عَنْ عَبْدِ اللَّهِ بنِ مَسْعُودٍ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: إِذَا انْفَلَتَتْ دَابَّةُ أَحَدِكُمْ بِأَرْضِ فَلاَةٍ فَلْيُنَادِ: يَا عِبَادَ اللَّهِ، احْبِسُوا عَلَيَّ، يَا عِبَادَ اللَّهِ احْبِسُوا عَلَيَّ، فَإِنَّ لِلَّهِ فِي الأَرْضِ حَاضِرًا سَيَحْبِسُهُ عَلَيْكُمْ.

இறைத் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் சொன்னார்கள்:

மக்கள் வசிக்காத வனாந்திரப் பகுதியில் உங்களில் ஒருவரின் வாகனம் தொலைந்துபோய்விட்டால், அல்லாஹ்வின் அடியார்களே! எனது வாகனத்தை பிடித்துக் கொடுங்கள்! அல்லாஹ்வின் அடியார்களே! எனது வாகனத்தை பிடித்துக் கொடுங்கள்! என்று அவர் கூறட்டும்! ஏனெனில், மண்ணுலகில் இறைவனுக்கு சில அடியார்கள் உள்ளனர். அவர்கள் அந்த வாகனத்தை உங்களுக்கு பிடித்துத் தருவார்கள்.

*அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: தபரானீ (கபீர்) எண் 10518, அபூயஅலா எண் 5269, தய்லமீ எண் 1311.*

عَنْ عُتْبَةَ بن غَزْوَانَ، عَنْ نَبِيِّ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ:"إِذَا أَضَلَّ أَحَدُكُمْ شَيْئًا أَوْ أَرَادَ أَحَدُكُمْ عَوْنًا وَهُوَ بِأَرْضٍ لَيْسَ بِهَا أَنِيسٌ، فَلْيَقُلْ:"يَا عِبَادَ اللَّهِ أَغِيثُونِي، يَا عِبَادَ اللَّهِ أَغِيثُونِي، فَإِنَّ لِلَّهِ عِبَادًا لا نَرَاهُمْ"

இறைத் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மொழிந்தார்கள்:

மக்கள் அறவே இல்லாத பகுதியில் உங்களில் ஒருவர் ஏதாவது ஒரு பொருளைத் தொலைத்துவிட்டால், அல்லாஹ்வின் அடியார்களே! எனக்கு உதவிடுங்கள்! அல்லாஹ்வின் அடியார்களே! எனக்கு உதவிடுங்கள்! என அவர் கூறட்டும்! ஏனெனில், நம் பார்வைக்குத் தெரியாத சில அடியார்கள் இறைவனுக்கு இருக்கிறார்கள்.

*அறிவிப்பாளர்: உத்பா இப்னு ஙஸ்வான் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: தபரானீ (கபீர்) எண் 13737*

عَنْ مَالِكِ الدَّارِ ، قَالَ : وَكَانَ خَازِنَ عُمَرَ عَلَى الطَّعَامِ ، قَالَ: أَصَابَ النَّاسَ قَحْطٌ فِي زَمَنِ عُمَرَ ، فَجَاءَ رَجُلٌ إِلَى قَبْرِ النَّبِيِّ صلى الله عليه وسلم ، فَقَالَ : يَا رَسُولَ اللهِ، اسْتَسْقِ لأُمَّتِكَ فَإِنَّهُمْ قَدْ هَلَكُوا ، فَأَتَى الرَّجُلَ فِي الْمَنَامِ فَقِيلَ لَهُ : ائْتِ عُمَرَ فَأَقْرِئْهُ السَّلاَمَ ، وَأَخْبِرْهُ أَنَّكُمْ مُسْتَقِيمُونَ وَقُلْ لَهُ : عَلَيْكَ الْكَيْسُ ، عَلَيْكَ الْكَيْسُ ، فَأَتَى عُمَرَ فَأَخْبَرَهُ فَبَكَى عُمَرُ ، ثُمَّ قَالَ : يَا رَبِّ لاَ آلُو إِلاَّ مَا عَجَزْتُ عَنْهُ.

உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் ஆட்சிக் காலத்தில் கடும்பஞ்சம் நிலவியது. ஒரு தோழர் இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் கப்ருக்கு வந்து, யா ரஸூலல்லாஹ்! உங்கள் உம்மத்தினருக்கு மழை கிடைக்க ஏற்பாடு செய்யுங்கள்! (கடும் பஞ்சத்தால்) அழிவுக்குள்ளாகியிருக்கிறார்கள் என்று கூறினார்.

அவரது கனவில் இறைத் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தோன்றி மழை பொழியுமென்றும், உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு சலாம் கூறுமாறும் நவின்றார்கள்.

*அறிவிப்பாளர்: மாலிகுத்தார் (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: இப்னு அபீஷைபா – எண் 32665.*

இறைவன் தனது ஆற்றலை வெளிப்படுத்தும் வகையில் நல்லடியார்கள் மூலமாக அற்புதங்களை நிகழ்த்துவான். இறைத்தூதர்கள் வழியாக அவ்வற் புதங்கள் நிகழ்ந்தால் அவற்றிற்கு முஃஜிஸா என்றும், இறை நேசர்கள் மூலமாக நிகழ்ந்தால் கராமத் என்றும் கூறப்படும்.

# நேசன் தன் நேசர்களோடு...

عَنْ عَبْد اللَّه قَالَ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللَّه صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ يَا رَسُولَ اللَّه كَيْفَ تَرَى فِي رَجُلٍ أَحَبَّ قَوْمًا وَلَمَّا يَلْحَقْ بِهِمْ قَالَ رَسُولُ اللَّه صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الْمَرْءُ مَعَ مَنْ أَحَبَّ (البخاري ومسلم)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒருவர் வந்து, யா ரசூலல்லாஹ்! ஒரு சமூகத்தை ஒருவர் நேசிக்கிறார். ஆனால், அவர் அச்சமூகத்தை சந்தித்ததே இல்லை. இவரைப் பற்றி தாங்கள் என்ன கருத்துகூற விரும்புகிறீர்கள்?

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதிலுரைத்தார்கள்:

ஒருவர் யாரை நேசிக்கிறாரோ அவருடன் (மறுமையில்) இருப்பார்.

*அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரீ எண்: 6169, முஸ்லிம் எண்: 4779*

عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً سَأَلَ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ السَّاعَةِ فَقَالَ مَتَى السَّاعَةُ قَالَ وَمَاذَا أَعْدَدْتَ لَهَا قَالَ لاَ شَيْءَ إِلاَّ أَنِّي أُحِبُّ اللَّهَ وَرَسُولَهُ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ أَنْتَ مَعَ مَنْ أَحْبَبْتَ قَالَ أَنَسٌ فَمَا فَرِحْنَا بِشَيْءٍ فَرَحَنَا بِقَوْلِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْتَ مَعَ مَنْ أَحْبَبْتَ قَالَ أَنَسٌ فَأَنَا أُحِبُّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَبَا بَكْرٍ وَعُمَرَ وَأَرْجُو أَنْ أَكُونَ مَعَهُمْ بِحُبِّي إِيَّاهُمْ وَإِنْ لَمْ أَعْمَلْ بِمِثْلِ أَعْمَالِهِمْ (البخاري ومسلم)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு தோழர் வருகை தந்து, மறுமை நாள் எப்போது வருமென கேட்டார். அந்நாளுக்காக என்ன தயார் செய்து வைத்துள்ளீர்கள் என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருப்பிக்கேட்டபோது அத்தோழர் சொன்னார்:

தொழுகை, நோன்பு மற்றுமுள்ள எந்த வணக்கத்தையும் அதிகமாக நான் நிறைவேற்றவில்லை. ஆனால், இறைவனையும் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் உறுதியாக நேசிக்கிறேன்.

அப்போது இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

யாரை நீர் நேசிக்கிறீரோ அவருடன் இருப்பீர்.

இதை செவியுற்ற தோழர்கள் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தனர். இதுபோன்று வேறெதற்காகவும் அவர்கள் சந்தோஷமடைந்ததில்லை.

அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள்:

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அபூபக்ர் மற்றும் உமர் ரலியல்லாஹு அன்ஹுமா ஆகியோரை நான் நேசிக்கிறேன். ஆகவே, அவர்களின் அளவிற்கு நான் வணக்கம் செய்யாவிட்டாலும் கூட அவர்களுடன் இருப்பேன் என்று எதிர் பார்க்கிறேன்.

*அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: புகாரீ எண்: 3633, 6171, முஸ்லிம் எண்: 4775*

இறைத்தூதர்களையும் இறை நேசர்களையும் நேசிக்கின்ற இஸ்லாமியர்கள் நற்பேறுபெற்றவர்கள். காரணம், நாளை மறுமையில் சுவனத்தில் நபிமார்கள்–வலிமார்களோடு இருக்கிற உயர்பதவியடைந்தவர்கள். மேலும், அர்ஷின் நிழலுக்கு சொந்தக்காரர்கள்.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நவின்றார்கள்:

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ اللَّهَ يَقُولُ يَوْمَ الْقِيَامَةِ أَيْنَ الْمُتَحَابُّونَ بِجَلَالِي الْيَوْمَ أُظِلُّهُمْ فِي ظِلِّي يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلِّي (مسلم وأحمد)

மறுமைநாளில் இறைவன் கேட்பான்: என்னை மகிமைப்படுத்துவதில் தங்களுக்கு மத்தியில் நேசித்துக் கொண்டவர்கள் எங்கே? எனது நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத இந்நாளில் அவர்களுக்கு எனது நிழலைத் தருகிறேன்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு, நூல்: முஸ்லிம் எண்: 4655, அஹ்மத் எண்: 6933*

عن أبي هريرة قال: قال رسول الله صلى الله عليه وسلم: «لو أن عبدين تحابا في الله عز وجل، واحد في المشرق وآخر في المغرب لجمع الله بينهما يوم القيامة، يقول: هذا الذي كنت تحبه في» (البيهقي في شعب الإيمان)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

இறைவனுக்காக ஒருவருக்கொருவர் நேசித்துக்

கொண்ட இருவரில் ஒருவர் சூரியன் உதிக்குமிடத்தி லும் மற்றவர் சூரியன் அஸ்தமிக்குமிடத்திலும் இருந்தாலும் மறுமையில் இவ்விருவரையும் இறைவன் ஒன்றிணைத்துக் கூறுவான்.

என் விஷயத்தில் நீ நேசித்தது இவரைத்தான்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: பைஹகீ (ஷுஅபுல் ஈமான்) எண்: 8732*

புனித மதீனாவில் வாழும் கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், பக்தாது மாநகரில் வாழும் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அழகிய அஜ்மீர் ஷரீஃபில் வாழும் ஹாஜா முயீனுத் தீன் ஜிஷ்தி ரலியல்லாஹு அன்ஹு மற்றும் நானிலம் போற்றும் நாகூரில் வாழும் ஷாகுல் ஹமீத் நாயகம் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரை நாம் உளமாற நேசித்தால் மேற்கண்ட ஹதீஸின் அடிப்படையில் அவர்களுடன் சுவனபதியில் நம்மை இறைவன் சேர்த்து வைப்பான் என்பது உறுதி. அத்தகைய நற்பேறு நமதனைவருக்கும் கிடைக்கட்டுமாக!



## வலிமார்கள் [இறைநேசர்கள்] யார்?

பூரண ஈமானையும் நிறைந்த இறையச்சத்தையும் பெற்றவர்களே இறைநேசர்கள். அவர்களைக் காணும் போது இறைவனைப் பற்றிய நினைவு வரும். இருண்ட உள்ளங்களுக்கு ஒளி கிடைக்கும். அத்தகைய சீரிய குணங்களுக்கு சொந்தக்காரர்கள் தான் வலிமார்கள்.

இறைவன் கூறினான்:

أَلاَ إِنَّ أَوْلِيَاءَ اللهِ لاَ خَوْفٌ عَلَيْهِمْ وَلاَ هُمْ يَحْزَنُونَ * الَّذِينَ آمَنُوا وَكَانُوا يَتَّقُونَ (سورة يونس)

அறிந்துகொள்ளுங்கள்! திண்ணமாக இறைநேசர் (கள் எனும் வலிமார்)களுக்கு எவ்வித பயமுமில்லை. அவர்கள் துக்கம்கொள்ளவும் மாட்டார்கள். (முழுமை யான) ஈமானையும் இறையச்சத்தையும் அவர்கள் பெற்றிருப்பார்கள். *(அல்குர்ஆன்: 10:62,63)*

عَنْ أَسْمَاءَ بِنْتِ يَزِيدَ أنها سمعت رسول الله صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يقول ألا أنبئكم بخياركم قالوا بلى يا رسول الله قال خياركم الذين إذا رءوا ذكر الله عز وجل (ابن ماجه وأحمد)

உங்களில் நல்லோர்கள் யார் என்பதை அறிவிக்கட் டுமா? என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்டபோது, அறிவித்தாருங் களென அருமைத் தோழர்கள் மறுமொழி பகர்ந்தனர்.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

யாரை பார்க்கும்போது இறைவனைப் பற்றிய

நினைவு உங்களுக்கு ஏற்படுகிறதோ அவர்களே உங்களில் சிறந்தவர்கள்.

*அறிவிப்பாளர்: அஸ்மா பின்த் யஸீத் ரலியல்லாஹு அன்ஹா, நூல்: இப்னுமாஜா எண்: 4109, அஹ்மத் எண்: 26319*

عَنْ ابن عباس سُئِل رَسُولُ اللّٰه صَلَّى اللّٰهُ عَلَيْه وَسَلَّمَ مَن أولياء اللّٰه، قال الذين إذَا رُءوا ذكر اللّٰه (النسائي في السنن الكبرى)

வலிமார்கள் யாரென வினா எழுப்பட்ட சமயத்தில் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதிலுரைத்தார்கள்:

யாரை பார்க்கும்போது இறைவனின் நினைவு உங்களுக்கு வருகிறதோ அத்தகையவர்களே வலிமார்கள்.

*அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: நசாயீ (சுனன் குப்ரா) எண்: 11235*

عَنْ عبدالله قال قال رسول الله صلى الله عليه وسلم: إن من الناس مفاتيح لذكر الله إذَا رُءوا ذكر اللّٰه

(الطبراني في المعجم الكبير والبيهقي في شعب الإيمان)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ்வின் திக்ரை திறந்துவிடும் திறவு கோள்களாக மனிதர்களில் சிலர் உள்ளனர். அவர்களை நீங்கள் கண்டால் இறைவனைப் பற்றிய நினைவு வரும்.

*அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: தபரானீ (கபீர்) எண்: 10325, பைஹகீ (ஷுஅபுல் ஈமான்) எண்: 718*

வலிமார்கள் யாரென்று இப்பாருலகில் நம்மால் அடையாளம் கண்டு கொள்ள இயலுமென்பதை பல்வேறு ஹதீஸ்கள் அறிவித்துக் காட்டுகின்றன.

عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ مُرَّ عَلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِجَنَازَةٍ فَأَثْنَوْا عَلَيْهَا خَيْرًا فَقَالَ وَجَبَتْ ثُمَّ مُرَّ بِأُخْرَى فَأَثْنَوْا عَلَيْهَا شَرًّا أَوْ قَالَ غَيْرَ ذَلِكَ فَقَالَ وَجَبَتْ فَقِيلَ يَا رَسُولَ اللَّهِ قُلْتَ لِهَذَا وَجَبَتْ وَلِهَذَا وَجَبَتْ قَالَ شَهَادَةُ الْقَوْمِ الْمُؤْمِنُونَ شُهَدَاءُ اللَّهِ فِي الْأَرْضِ (البخاري ومسلم)

சஹாபா பெருமக்கள் ஒரு ஜனாஸாவை புகழ்ந்து பேசியபோது, அந்த ஜனாஸாவிற்கு சொர்க்கம் கடமையாகி விட்டதென கூறிய இறைத்தூதர் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேலும் சொன்னார்கள்:

இறைநம்பிக்கையாளர்(களான முஃமின்)கள் இந்த மண்ணுலகில் அல்லாஹ்வின் சாட்சியாளர்கள்.

*அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: புகாரீ எண்: 2642, முஸ்லிம் எண்: 1578*

இறைவன் ஹதீஸ் குத்ஸிய்யில் கூறினான்:

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ اللَّهَ قَالَ مَنْ عَادَى لِي وَلِيًّا فَقَدْ آذَنْتُهُ بِالْحَرْبِ (البخاري)

எனது நேசரை பகைத்துக் கொள்பவர்களிடம் யுத்தப் பிரகடனம் செய்கிறேன்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: புகாரீ எண் 6502*

வலிமார்களை பகைத்துக் கொள்வது இறைவனு

டன் போர் புரிவதற்கு சமமென்று தெளிவுபடுத்திய மேற்கண்ட ஹதீஸ் அத்தகைய தகாத செயலை அறவே செய்யக் கூடாதென வலியுறுத்தவும் செய்கிறது. இறைநேசர்கள் யாரென்று நமக்கு தெரிந்தால்தான், அவர்களை பகைத்துக் கொள்ளக் கூடாதென்ற இறைக்கட்டளையை அமுல்படுத்த முடியும். குர்ஆன்-ஹதீஸை புரியாத சிலர் கூறுவது போன்று இறைநேசர்களை அடையாளம் காண முடியாது என்பதே சரியென்றிருந்தால், நம்மால் செய்ய இயலாததை இறைவன் சட்டமாக்கியுள்ளான் என்றாகி விடும். இது கீழ்க்காணும் குர்ஆன் வசனத் திற்கு முரணாகும்.

இறைவன் கூறினான்:

لاَ يُكَلِّفُ اللهُ نَفْسًا إِلاَّ وُسْعَهَا لَهَا (البقرة)

எந்த ஆத்மாவையும் அதன் சக்திக்கு உட்பட்டே தவிர பொறுப்பை இறைவன் சுமத்தமாட்டான்.

*(அல்குர்ஆன்: 2:286)*

மேலும், நல்லோர்களுடன் நட்பு வைப்பது, தோழமை உறவு கொள்வது, திருமணம் செய்வது மற்றும் அவர்களுக்கு உணவளிப்பது போன்ற ஆணைகளை இஸ்லாமிய மார்க்கம் பிறப்பிக்கிறது. நல்லோர்கள் யாரென்று நம்மால் அடையாளம் காண இயலா தென்றால் மேற்கண்ட நற்செயல்களை நிறைவேற்ற முடியாதென்பதுடன் மார்க்கத்தின் கட்டளைகளும் அர்த்தமற்றதாகவுமல்லவா ஆகிவிடும்!

இறைவன் கூறினான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللهَ وَكُونُوا مَعَ الصَّادِقِينَ (التوبة)

இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! மேலும், உண்மையாளர்களுடன் இருங்கள்! *(அல்குர்ஆன்: 9:119)*

عَنْ أَبِي سَعِيد عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لاَ تُصَاحِبْ إِلاَّ مُؤْمِنًا وَلاَ يَأْكُلْ طَعَامَكَ إِلاَّ تَقِيٌّ (أبوداود والترمذي)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

இறைநம்பிக்கையாளருடன் தோழமை வைத்துக் கொள்! இறையச்சமுள்ளவருக்கு உணவளி!

*அறிவிப்பாளர்: அபூசயீத் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: அபூதாவூத் எண்:4192, திர்மிதீ எண்: 2318*

இறையச்சமென்பது உள்ளம் சம்பந்தப்பட்டதே. எனினும், ஒருவரின் நடைமுறைகள், நற்குணங்கள் மற்றும் பழக்க வழக்கங்களைக் கொண்டு அவர் இறையச்சமுள்ளவரா? இல்லையா? என்பதை புரிந்து கொள்ள முடியும். ஆகவேதான், இறையச்சமுள்ளவருக்கு உணவளியுங்கள் என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவுரை வழங்கியுள்ளார்கள்.

இறையச்சமுள்ளவரை அறிந்து கொள்ள இயலாதென எவராவது வாதித்தால் நடைமுறைப்படுத்த சாத்தியமற்ற ஒன்றை இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் செய்ய சொல்லியிருக்கிறார்கள் என்ற தவறான கருத்து ஏற்பட்டுவிடும். இறைவன் நம்மை பாதுகாப்பானாக!

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ تُنْكَحُ الْمَرْأَةُ لأَرْبَعٍ لِمَالِهَا وَلِحَسَبِهَا وَجَمَالِهَا وَلِدِينِهَا فَاظْفَرْ بِذَاتِ الدِّينِ تَرِبَتْ يَدَاكَ (البخاري ومسلم)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இயம்பினார்கள்:

ஒரு பெண்மணி நான்கு காரணங்களுக்காக திருமணம் செய்து கொள்ளப்படுவாள்.

1. செல்வம் நிறைந்தவள் என்பதற்காக.

2. உயர்குலத்தைச் சார்ந்தவள் என்பதற்காக.

3. அழகு மிகுந்தவள் என்பதற்காக.

4. மார்க்கப்பற்றுள்ளவள் என்பதற்காக.

நீ மார்க்கப்பற்றுள்ள பெண்ணை திருமணம் செய்து (வாழ்க்கையில்) வெற்றியடைந்து கொள்!

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: புகாரீ எண்: 5090, முஸ்லிம் எண்: 2661*

இறையச்சமென்பது இங்குதான் உள்ளது என்று தன் நெஞ்சை சுட்டிக்காட்டிய பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்தான் நல்லோர்களை அடையாளம் கண்டு கொள்ள இயலுமென்பதையும் அறிவித்துள்ளார்கள். மறுதலிக்கும் வஹ்ஹாபிகள் இதை புரிந்துகொள்வது அவர்களுக்கு நல்லது.

# இறைநேசர்களின் அற்புதங்கள்

இறைவன் தனது ஆற்றலை வெளிப்படுத்தும் வகையில் நல்லடியார்கள் மூலமாக அற்புதங்களை நிகழ்த்துவான். இறைத்தூதர்கள் வழியாக அவ்வற்புதங்கள் நிகழ்ந்தால் அவற்றிற்கு முஃஜிஸா என்றும், இறைநேசர்கள் மூலமாக நிகழ்ந்தால் கராமத் என்றும் கூறப்படும்.

## பருவமற்ற காலத்திலும் பழவகைகள்

இறைவன் கூறினான்:

كُلَّمَا دَخَلَ عَلَيْهَا زَكَرِيَّا الْمِحْرَابَ وَجَدَ عِنْدَهَا رِزْقًا قَالَ يَا مَرْيَمُ أَنَّى لَكِ هَذَا قَالَتْ هُوَ مِنْ عِنْدِ اللهِ إِنَّ اللهَ يَرْزُقُ مَنْ يَشَاءُ بِغَيْرِ حِسَابٍ

அவரது (மர்யம்) அறையில் ஜகரிய்யா பிரவேசித்த போதெல்லாம் அவரிடம் ஏதாவதொரு உணவு உள்ளதைப் பார்த்துவிட்டு கேட்டார்: மர்யமே! எங்கிருந்து இது உனக்குக் கிடைத்தது? அவர் (மர்யம்) சொன்னார்: இது அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது. அல்லாஹ் தான் நாடியவருக்கு கணக்கில்லாமல் வழங்குவான். *(அல்குர்ஆன் 3:37)*

أَنَّ بِنْتَ الْحَارِثِ أَخْبَرَتْهُ أَنَّهُمْ حِينَ اجْتَمَعُوا اسْتَعَارَ مِنْهَا مُوسَى يَسْتَحِدُّ بِهَا فَأَعَارَتْهُ فَأَخَذَ ابْنًا لِي وَأَنَا غَافِلَةٌ حِينَ أَتَاهُ قَالَتْ فَوَجَدْتُهُ مُجْلِسَهُ عَلَى فَخِذِهِ وَالْمُوسَى بِيَدِهِ فَفَزِعْتُ فَزْعَةً عَرَفَهَا خُبَيْبٌ فِي وَجْهِي فَقَالَ تَخْشَيْنَ أَنْ أَقْتُلَهُ مَا كُنْتُ لِأَفْعَلَ ذَلِكَ وَاللَّهِ مَا رَأَيْتُ أَسِيرًا قَطُّ خَيْرًا مِنْ خُبَيْبٍ وَاللَّهِ لَقَدْ وَجَدْتُهُ يَوْمًا يَأْكُلُ مِنْ قِطْفِ عِنَبٍ فِي يَدِهِ وَإِنَّهُ لَمُوثَقٌ فِي الْحَدِيدِ وَمَا بِمَكَّةَ مِنْ ثَمَرٍ وَكَانَتْ تَقُولُ إِنَّهُ لَرِزْقٌ مِنَ اللَّهِ رَزَقَهُ خُبَيْبًا (البخاري: 3045)

குபைப் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களை கொன்று விடவேண்டுமென முடிவெடுத்து நேரமது. திராட்சை கொத்திலிருந்து குபைப் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் பழங்களை சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அந்நாளில் மக்காவில் எந்தப் பழமுமில்லை. ஆகவே, அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய உணவு தான் அது. நேரில் பார்த்த ஹாரிஃதாவின் மகள் இதைக் கூறினார்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி),*
*நூல்: புகாரீ ஹதீஸ் எண் 3045*

பழவகைகளுக்கு பல்வேறு பருவ காலங்களுண்டு. குறிப்பிட்ட சில வகைப் பழங்கள் எல்லா பருவங்களிலும் கிடைக்காது. ஆனால், மர்யம் (அலை) அவர்களும் குபைப் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களும் அப்பருவத்தில் இல்லாத பழங்களை உண்டுள்ளார்கள். இது இறைவன் அவ்விருவருக்கும் வழங்கிய அற்புதங்கள்.

## இருள் விலக்கிய அகல் விளக்கு

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ أَنَّ رَجُلَيْنِ مِنْ أَصْحَابِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خَرَجَا مِنْ عِنْدِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي لَيْلَةٍ مُظْلِمَةٍ وَمَعَهُمَا مِثْلُ الْمِصْبَاحَيْنِ يُضِيئَانِ بَيْنَ أَيْدِيهِمَا فَلَمَّا افْتَرَقَا صَارَ مَعَ كُلِّ وَاحِدٍ مِنْهُمَا وَاحِدٌ حَتَّى أَتَى أَهْلَهُ

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடமிருந்து இரு தோழர்கள் விடைபெற்று சென்றனர். அப்போது கும்மிருட்டுள்ள இரவு நேரமாகயிருந்தது. அவர்கள் செல்லும்போது அவர்களுக்கு முன்பாக இரு விளக்குகள் போல ஒளி

கொடுத்துக் கொன்டிருந்தது. அவ்விருவரும் தத்தமது வீட்டிற்கு செல்வதற்காக பிரிந்து நேரத்தில் ஆளுக் கொரு விளக்கு அவர்கள் வீடு செல்கின்றவரை வெளிச்சம் கொடுத்தது.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலி),*
*நூல்: புகாரீ ஹதீஸ் எண் 3639*

இவ்விரு தோழர்களில் ஒருவரின் பெயர் உசைது இப்னு ஹுழைர். மற்றவரின் பெயர் அப்பாது இப்னு பிஷ்ர் (ரலியல்லாஹு அன்ஹு).

## மண்ணறையில் மறை ஓதுதல்

عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ ضَرَبَ بَعْضُ أَصْحَابِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خِبَاءَهُ عَلَى قَبْرٍ وَهُوَ لَا يَحْسِبُ أَنَّهُ قَبْرٌ فَإِذَا فِيهِ إِنْسَانٌ يَقْرَأُ سُورَةَ تَبَارَكَ الَّذِي بِيَدِهِ الْمُلْكُ حَتَّى خَتَمَهَا فَأَتَى النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ يَا رَسُولَ اللَّهِ إِنِّي ضَرَبْتُ خِبَائِي عَلَى قَبْرٍ وَأَنَا لَا أَحْسِبُ أَنَّهُ قَبْرٌ فَإِذَا فِيهِ إِنْسَانٌ يَقْرَأُ سُورَةَ تَبَارَكَ الْمُلْكِ حَتَّى خَتَمَهَا فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ هِيَ الْمَانِعَةُ هِيَ الْمُنْجِيَةُ تُنْجِيهِ مِنْ عَذَابِ الْقَبْرِ

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடம் ஒரு தோழர் வந்து சொன்னார்:

*யா ரஸூலல்லாஹ்!* ஒரு கப்ருக்கு மேலே அது கப்ர் என தெரியாமல் கூடாரம் அமைத்துத் தங்கினேன். அப்போது, கப்ருக்குள்ளேயிருந்தவர் முல்க் அத்தியா யத்தை முழுமையாக ஓதினார்.

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், நவின்றார்கள்: அந்த (முல்க்) அத்தியாயம்

(நரக வேதனையை) தடுக்கும். ஈடேற்றத்தை கொடுக்கும்.

*அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலி), நூல்: திர்மிதீ ஹதீஸ் எண் 2815*

## மண்ணறையில் பேரொளி

عَنْ عَائِشَةَ قَالَتْ لَمَّا مَاتَ النَّجَاشِيُّ كُنَّا نَتَحَدَّثُ أَنَّهُ لاَ يَزَالُ يُرَى عَلَى قَبْرِهِ نُورٌ

(அபிசீனிய மன்னர்) நஜாஷீ இறந்த பிறகு அவரது கப்ரில் ஒளி தென்பட்டுக் கொண்டேயிருந்தது என்று நாங்கள் பேசிக்கொள்வோம்.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலி), நூல்: அபூதாவூத் ஹதீஸ் எண் 2161*

## அர்ஷ் அசைந்தது

عَنِ ابْنِ عُمَرَ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ هَذَا الَّذِي تَحَرَّكَ لَهُ الْعَرْشُ وَفُتِحَتْ لَهُ أَبْوَابُ السَّمَاءِ وَشَهِدَهُ سَبْعُونَ أَلْفًا مِنَ الْمَلاَئِكَةِ لَقَدْ ضُمَّ ضَمَّةً ثُمَّ فُرِّجَ عَنْهُ

சஃது இப்னு முஆஃத் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் இறந்ததன் பின்னர் இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்:

இவருக்காகத்தான் அர்ஷ் ஆடியது. வானத்து வாசல்கள் திறக்கப்பட்டன. மேலும், எழுபதாயிரம் மலக்குகள் இவரது ஜனாஸா தொழுகையில் கலந்து கொண்டனர்.

*அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி), நூல்: நசாயீ எண் 2028, தபரானீ (கபீர்) எண் 5333*

## எல்லைதாண்டிய பார்வை

عَنِ ابْنِ عُمَرَ، أَنَّ عُمَرَ بَعَثَ جَيْشاً وَأَمَّرَ عَلَيْهِمْ رَجُلاً يُدْعَى سَارِيَةَ فَبَيْنَمَا عُمَرُ رَضِيَ اللهُ عَنْهُ يَخْطُبُ يَصِيحُ: يَا سَارِي، اَلْجَبَلُ، فَقَدِمَ رَسُولٌ مِنَ الْجَيْشِ فَقَالَ: يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ، لَقِينَا عَدُوَّنَا فَهَزَمُونَا، فَإِذَا صَائِحٌ يَصِيحُ: يَا سَارِي، اَلْجَبَلُ، فَأَسْنَدْنَا ظُهُورَنَا إِلَى الْجَبَلِ فَهَزَمَهُمُ اللهُ

திண்ணமாக உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். சாரியா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களை அப்படைக்கு தளபதியாக நியமித்தார்கள். (மதீனா வில்) சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் யா சாரியா அல் ஜபல் (சாரியாவே! மலையை கவனித்து சண்டையி டுங்கள்!) என சப்தமிட்டார்கள்.

பிறகு படையிலிருந்து ஒரு தூதர் வந்து சொன்னார்: அமீருல் முஃமினீன் அவர்களே! எங்கள் எதிரிக ளோடு நாங்கள் போர் புரிந்தபோது அவர்கள் எங்களை விரட்டியடித்தார்கள். அப்போது யா சாரியா அல்ஜபல் என்று ஒரு சத்தம் கேட்டது. பின்னர் மலையை எங்களுக்கு பின்புறமாக ஆக்கிக் கொண்டு போர் செய்தோம். அல்லாஹ் அவர்களை விரட்டி விட்டான்.

*அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி), நூல்:*
*பைஹகீ (தலாயிலுந் நுபுவ்வா) ஹதீஸ் எண் 2655*

யுத்தம் நடைபெற்ற இடம் பாரசீகம். உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் சொற்பொழிவு ஆற்றியது மதீனா மாநகரம். பன்னூற்றுக் கணக்கான

மைல்களுக்கு அப்பால் நடைபெறும் நிகழ்வை உமர் (ரலியல்லாஹுˇ அன்ஹுˇ) பார்த்ததும், இவர்கள் கொடுத்த சத்தத்தை பாரசீகத்திலுள்ள தோழர்கள் செவியுற்றதும் இறைவன் வழங்கிய (கராமத்) அற்புதங்களாகும்.

## வயிற்றிலுள்ள குழந்தை ஆணா? பெண்ணா?

عَنْ عَائِشَةَ زَوْجِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنَّهَا قَالَتْ إِنَّ أَبَا بَكْرٍ الصِّدِّيقَ كَانَ نَحَلَهَا جَادَّ عِشْرِينَ وَسْقًا مِنْ مَالِهِ بِالْغَابَةِ فَلَمَّا حَضَرَتْهُ الْوَفَاةُ قَالَ وَاللَّهِ يَا بُنَيَّةُ مَا مِنْ النَّاسِ أَحَدٌ أَحَبُّ إِلَيَّ غِنًى بَعْدِي مِنْكِ وَلَا أَعَزُّ عَلَيَّ فَقْرًا بَعْدِي مِنْكِ وَإِنِّي كُنْتُ نَحَلْتُكِ جَادَّ عِشْرِينَ وَسْقًا فَلَوْ كُنْتِ جَدَدْتِيهِ وَاحْتَزْتِيهِ كَانَ لَكِ وَإِنَّمَا هُوَ الْيَوْمَ مَالُ وَارِثٍ وَإِنَّمَا هُمَا أَخَوَاكِ وَأُخْتَاكِ فَاقْتَسِمُوهُ عَلَى كِتَابِ اللَّهِ قَالَتْ عَائِشَةُ فَقُلْتُ يَا أَبَتِ وَاللَّهِ لَوْ كَانَ كَذَا وَكَذَا لَتَرَكْتُهُ إِنَّمَا هِيَ أَسْمَاءُ فَمَنْ الْأُخْرَى فَقَالَ أَبُو بَكْرٍ ذُو بَطْنِ بِنْتِ خَارِجَةَ أُرَاهَا جَارِيَةً

*மரணத்தருவாயிலிருந்த அபூபக்ர் சித்தீக் (ரலியல் லாஹுˇ அன்ஹுˇ) அவர்கள் என்னிடம் கூறினார்கள்:*

*ஆயிஷாவே! நான் விட்டுச் செல்கிற வராஸ்தத் சொத்துகளை நீயும் உனது இரு சகோதரர்களும் மற்றும் இரு சகோதரிகளும் இறைவன் குர்ஆனில் கூறியபடி பங்கு பிரித்துக் கொள்ளுங்கள்!*

*நான் கேட்டேன்: எனதருமைத் தந்தையார் அவர்களே! இரு சகோதரிகள் என்றீர்களே! அஸ்மா என்ற ஒரு சகோதரிதானே எனக்குள்ளார்! இன்னொரு சகோதரி யார்?*

*(ஆயிஷாவே!) எனது மனைவியார் பின்து காரிஜா*

கர்ப்பமாக உள்ளார். அவர் பெண் குழந்தையை ஈன்றெடுப்பார். (எனவேதான் உனக்கு இரு சகோதரிகள் என்றேன்).

அவர்கள் கூறியது போன்று பின்து காரிஜா அவர்கள் உம்மு குல்தூம் எனும் பெண் குழந்தையை ஈன்றெடுத்தார்கள்.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலி), நூல்: முஅத்தா எண் 1242, பைஹகீ எண் 12267*

ஒரு பெண்ணின் வயிற்றிலுள்ள கரு ஆணா? அல்லது பெண்ணா? என்பதை நானே அறிவேன் என்று அல்குர்ஆன் 31:34 வசனத்தில் கூறிய இறைவன் தான் நாடிய நல்லடியார்களுக்கு அந்த ஞானத்தை அறிவித்துக் கொடுக்கிறான். மேற்கண்ட ஹதீஸ் இதை பறை சாற்றுகிறது.

## மரணத்தை அறிந்த மாண்பாளர்கள்

عَنْ سَلْمَى قَالَتْ اشْتَكَتْ فَاطِمَةُ شَكْوَاهَا الَّتِي قُبِضَتْ فِيهِ فَكُنْتُ أُمَرِّضُهَا فَأَصْبَحَتْ يَوْمًا كَأَمْثَلِ مَا رَأَيْتُهَا فِي شَكْوَاهَا تِلْكَ قَالَتْ وَخَرَجَ عَلِيٌّ لِبَعْضِ حَاجَتِهِ فَقَالَتْ يَا أُمَّهْ اسْكُبِي لِي غُسْلاً فَسَكَبْتُ لَهَا غُسْلاً فَاغْتَسَلَتْ كَأَحْسَنِ مَا رَأَيْتُهَا تَغْتَسِلُ ثُمَّ قَالَتْ يَا أُمَّهْ أَعْطِينِي ثِيَابِي الْجُدُدَ فَأَعْطَيْتُهَا فَلَبِسَتْهَا ثُمَّ قَالَتْ يَا أُمَّهْ قَدِّمِي لِي فِرَاشِي وَسَطَ الْبَيْتِ فَفَعَلْتُ وَاضْطَجَعَتْ وَاسْتَقْبَلَتْ الْقِبْلَةَ وَجَعَلَتْ يَدَهَا تَحْتَ خَدِّهَا ثُمَّ قَالَتْ يَا أُمَّهْ إِنِّي مَقْبُوضَةٌ الْآنَ إِنِّي مَقْبُوضَةٌ الْآنَ وَقَدْ تَطَهَّرْتُ فَلَا يَكْشِفُنِي أَحَدٌ فَقُبِضَتْ مَكَانَهَا قَالَتْ فَجَاءَ عَلِيٌّ فَأَخْبَرْتُهُ

ஃபாத்திமா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் நோயுற்றிருந்தபோது அவர்களுக்கு நான் சிகிச்சைய

ளித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாள் காலை என்றைக்குமில்லாத சில செயல்களை செய்தார்கள். அலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் வெளியே சென்றிருந்த நேரம் அது.

ஃபாத்திமா (ரலி) அவர்கள் என்னிடம் குளிப்பதற்கு ஏற்பாடு செய்யுங்களென்றார்கள். தண்ணீர் கொடுத்தேன். அழகிய முறையில் குளித்தார்கள். எனது புதிய ஆடைகளை கொடுங்களென்றார்கள். கொடுத்தேன். அதை அணிந்து கொண்டார்கள். வீட்டின் நடுப் பகுதியில் எனது படுக்கையை போடுங்கள் எனக் கூறினார்கள். அவ்வாறே செய்தேன். படுக்கையில் கிப்லாவை முன்னோக்கியவண்ணம் ஒருக்களித்து படுத்துக்கொண்டார்கள். தனது கையை கன்னத்திற்குக் கீழாக வைத்துக்கொண்டார்கள். பிறகு கூறினார்கள்: செவிலித்தாயார் அவர்களே! இப்பொழுது இவ்வுலகை விட்டும் பிரியப்போகிறேன்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவர்கள் இருந்த இடத்திலேயே அவர்களின் உயிர் பிரிந்தது. வெளியில் சென்றிருந்த அலீ (ரலி) அவர்கள் வருகை புரிந்தார்கள். நடந்தவை அனைத்தையும் அவர்களிடம் கூறினேன்.

*அறிவிப்பாளர்: சல்மா (ரலி),*
*நூல்: அஹ்மது ஹதீஸ் எண் 26333*

عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللهُ عَنْهُمَا، أَنَّ عُثْمَانَ أَصْبَحَ فَحَدَّثَ، فَقَالَ: إِنِّي رَأَيْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي الْمَنَامِ اللَّيْلَةَ، فَقَالَ: "يَا عُثْمَانُ، أَفْطِرْ عِنْدَنَا" فَأَصْبَحَ عُثْمَانُ صَائِماً فَقُتِلَ مِنْ يَوْمِهِ رَضِيَ اللهُ عَنْهُ "هذا حديث صحيح الإسناد، ولم يخرجاه"

உஸ்மான் (ரலியல்லாஹுஅன்ஹு) அவர்கள் காலை நேரத்தில் ஒரு செய்தியை சொன்னார்கள்:

திண்ணமாக நான் இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை கடந்த இரவு கனவிலே கண்டேன். அப்போது அவர்கள் கூறினார் கள்: உஸ்மானே! நம்மிடம் வந்து நோன்பு திறங்கள்!

அன்றைய தினம் நோன்பு வைத்த நிலையில் உஸ்மான் (ரலி) அவர்கள் ஷஹீதாக்கப்பட்டார்கள்.

*அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி), நூல்:*
*ஹாக்கிம் எண் 4530, இப்னு அபீஷைபா எண் 30510*

ஒருவர் எங்கே மரணிப்பார்? எப்போது மரணிப் பார்? என்பது இறைவன் ஒருவனே அறிவான். அவ் விறைவன் தான் நாடிய நல்லவர்களுக்கு அவ்வப் போது மரண செய்தியை அறிவித்துக் கொடுப்பான் என்பதை மேற்கண்ட ஹதீஸின் மூலம் தெளிவாக புரிந்து கொள்கிறோம்.



# வலிமார்கள் வகைகள்

இறைநேசர்களின் படித்தர நிலைகள் பல உள்ளன. குத்பு, நுஜபா, நுகபா மற்றும் அப்தால் அவற்றில் சில. ஒவ்வொரு நிலையிலுள்ளவர்களும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் இருக்கின்றனர்.

عَنْ عَلِيِّ بْنِ أَبِي طَالِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ لاَ إِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ الأَبْدَالُ يَكُونُونَ بِالشَّامِ وَهُمْ أَرْبَعُونَ رَجُلاً كُلَّمَا مَاتَ رَجُلٌ أَبْدَلَ اللَّهُ مَكَانَهُ رَجُلاً يُسْقَى بِهِمْ الْغَيْثُ وَيُنْتَصَرُ بِهِمْ عَلَى الأَعْدَاءِ وَيُصْرَفُ عَنْ أَهْلِ الشَّامِ بِهِمْ الْعَذَابُ (رواه أحمد)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

சிரியா (ஷாம்) நாட்டில் அப்தால்கள் இருப்பார்கள். அவர்களின் எண்ணிக்கை நாற்பதாகும். அவர்களில் ஒருவர் மரணித்துவிட்டால் அவரின் இடத்தில் இன்னொருவரை இறைவன் நியமித்து விடுவான். அவர்களின் மூலமாகவே மழை பொழியும். விரோதிகளுக்கெதிராக உதவி கிட்டும். சிரியா நாட்டு மக்களை விட்டும் வேதனை அகலும்.

*அறிவிப்பாளர்: அலீ ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: அஹ்மத் எண் 854*

عَنْ ابن مسعود قال: قال رسول الله صلى الله عليه وسلم: لا يزال أربعون رجلاً من أمتي قلوبهم على قلب إبراهيم، يدفع الله بهم عن أهل الأرض، يقال لهم الأبدال، قال رسول الله صلى الله عليه وسلم: إنهم لم يدركوها بصلاة ولا بصوم ولا صدقة، قالوا: يا رسول الله، فبم أدركوها؟ قال: بالسخاء والنصيحة للمسلمين (رواه الطبراني في المعجم الكبير وأبو نعيم في الحلية)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நவின்றார்கள்:

என் உம்மத்தில் நாற்பது நபர்கள் இருந்து கொண்டேயிருப்பார்கள். அவர்களின் உள்ளங்கள் இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போன்றிருக்கும். அவர்களின் மூலமாகத் தான் உலக மக்களை அல்லாஹ் பாதுகாக்கிறான். அவர்களுக்கு அப்தால் எனக் கூறப்படும்.

அவர்கள் இப்படித் தரத்தை அடைந்தது தொழுகை, நோன்பு மற்றும் தர்மத்தினாலல்ல.

வேறெதைக் கொண்டு இந்நிலையை எய்தப் பெற்றார்களென ஸஹாபா பெருமக்கள் கேட்டபோது, இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதிலுரைத்தார்கள்:

கொடைத் தன்மையுள்ள உள்ளம் மற்றும் முஸ்லிம்களுக்கு அறிவுரை வழங்குதல் ஆகியவற்றைக் கொண்டே இப்படித் தரம் பெற்றார்கள்.

*அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: தபரானீ (கபீர்) எண் 1039, அபூநுஐம் (ஹில்யா) பாகம் 2, பக்கம் 155*

عَنْ أنس قال: قال رسول الله صلى الله عليه وسلم: لن تخلو الأرض من أربعين رجلاً مثل إبراهيم خليل الرحمن، فبهم يسقون وبهم ينصرون، ما مات منهم أحد إلا أبدل الله مكانه آخر، قال: وسمعت قتادة يقول: لسنا نشك أن الحسن منهم. (رواه الطبراني في الأوسط)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மொழிந்தார்கள்:

இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களைப் போல (உள்ளங்களைப் பெற்றவர்கள்) நாற்பது நபர்கள் இம்மண்ணுலகில் இருந்துகொண்டேயிருப்பார்கள். அவர்களின் மூலமாகவே மழை பெய்யும். உதவியும் கிட்டும். அவர்களில் ஒருவர் இறந்தால் அவருடைய இடத்தில் வேறு ஒருவரை அல்லாஹ் நியமித்துவிடுவான்.

கத்தாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள்:

திண்ணமாக ஹசனுல் பஸ்ரீ ரஹிமஹுல்லாஹ் அத்தகைய அப்தால்களில் ஒருவரே. இதில் எவ்வித ஐயமுமில்லை.

*அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: தபரானீ (அவ்சத்) எண் 4101*

عَنْ عبدالله قال: قال رسول الله صلى الله عليه وسلم: إن لله عز وجل في الخلق ثلاثمائة قلوبهم على قلب آدم عليه السلام، ولله تعالى في الخلق أربعون قلوبهم على قلب موسى عليه السلام، ولله تعالى في الخلق سبعة قلوبهم على قلب إبراهيم عليه السلام، ولله تعالى في الخلق خمسة قلوبهم على قلب جبريل عليه السلام، ولله تعالى في الخلق ثلاثة قلوبهم على قلب ميكائيل عليه السلام، ولله تعالى في الخلق واحد قلبه على قلب إسرافيل عليه السلام، فإذا مات الواحد أبدل الله عز وجل مكانه من الثلاثة، وإذا مات من الثلاثة أبدل الله تعالى مكانه من الخمسة، وإذا مات من الخمسة أبدل الله تعالى مكانه من السبعة، وإذا مات من السبعة أبدل الله تعالى مكانه من الأربعين، وإذا مات من الأربعين أبدل الله تعالى مكانه من الثلاثمائة، وإذا مات من الثلاثمائة أبدل الله تعالى مكانة من العامة، فبهم يحيى ويميت، ويمطر وينبت ويدفع البلاء (رواه الديلمي وأبو نعيم في الحلية)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

இறைவனுடைய மனிதப்படைப்பில் முன்னூறு பேர்கள் உள்ளனர். இவர்களின் உள்ளங்கள் ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.

நாற்பது நபர்கள் உள்ளனர். இவர்களின் உள்ளங்கள் மூசா அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.

ஏழு நபர்கள் இருக்கின்றனர். இவர்களின் உள்ளங்கள் இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போல

ஐந்து பேர்கள் இருப்பார்கள். இவர்களின் உள்ளங்கள் ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போல் அமைந்திருக்கும்..

மூவர் உள்ளனர். இவர்களின் உள்ளங்கள் மீகாயீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.

ஒருவர் இருப்பார். அவரின் உள்ளம் இஸ்ராஃபீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.

இந்த ஒருவர் இறந்துவிட்டால் அவரின் இடத்தில் அடுத்த நிலையிலுள்ள மூவரிலிருந்து ஒருவரை இறைவன் நியமிக்கிறான்.

மூவரில் ஒருவர் மரணித்துவிட்டால் அவரது இடத்தில் அடுத்த நிலையிலுள்ள ஐவரிலிருந்து ஒருவரை இறைவன் நியமிக்கிறான்.

ஐவரில் ஒருவர் இறந்துபோய்விட்டால் அவரது இடத்தில் அதற்கெடுத்த நிலையிலுள்ள எழுவரிலிருந்து ஒருவரை இறைவன் நியமிக்கிறான்.

எழுவரில் ஒருவர் மரணித்துவிட்டால் அவருடைய இடத்தில் அடுத்தநிலையிலுள்ள நாற்பது பேர்களில் ஒருவரை இறைவன் நியமிக்கிறான்.

நாற்பது நபர்களில் ஒருவர் மரணித்துவிட்டால் அவரது இடத்தில் அடுத்த நிலையிலுள்ள முன்னூறு பேர்களில் ஒருவரை இறைவன் நியமிக்கிறான்.

முன்னூறு நபர்களில் ஒருவர் இறந்துவிட்டால் அவருடைய இடத்தில் பொதுமக்களிலிருந்து ஒருவரை தேர்ந்தெடுத்து அல்லாஹ் நியமிப்பான்.

இத்தகைய பல படித்தரங்களிலுள்ள இறைநேசர்கள் மூலமாகத் தான் அல்லாஹ் உயிர் கொடுக்கிறான். மரணிக்கச் செய்கிறான். மழைபொழிய வைக்கிறான். (பயிர்களை) முளைக்கச் செய்கிறான். மேலும், சோதனைகளை அகற்றுகிறான்.

*அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹு, தய்லமீ எண் 703, அபூ நுஐம் (ஹில்யா) பாகம், பக்கம் 9*



# மறைந்து வாழும் இறைநேசர்கள்

عَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَثَلُ الَّذِي يَذْكُرُ رَبَّهُ وَالَّذِي لاَ يَذْكُرُ رَبَّهُ مَثَلُ الْحَيِّ وَالْمَيِّتِ (البخاري)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மொழிந்தார்கள்: இறைவனை நினைவு கூர்பவனுக்கு உதாரணம் உயிர் வாழ்பவனைப் போல, நினைவு கூற மறந்தவன் இறந்த மனிதனைப் போல.

*அறிவிப்பாளர்: அபூமூசா அஷ்அரீ (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரீ எண் 6407*

மேற்கண்ட ஹதீஸின்படி இருந்தும்கூட இறந்தவர்களாக கருதப்படுபவர்கள் சாமானியர்கள். இறந்த பின்னும் இருந்துகொண்டிருப்பவர்கள் வலிமார்கள். இறந்துபோன மனிதர்களனைவரும் நல்லவர்களாக இருந்தாலும் தீயவர்களாக இருந்தாலும் உயிருடன் தான் உள்ளனர். இருப்பினும் நல்லடியார்கள் உயிர் வாழ்வின் பலனையும் பயனையும் அடைந்துகொண்டிருப்பதால் இறை நேசர்கள் ஹயாத்துடனிருக்கிறார்கள் என கூறுகிறோம். எப்பயனுமில்லாமல் இவ்வுலகில் வாழும் மனிதனை நடமாடும் பினம் என்று நாம் உரைப்பது போல.

இறைவன் கூறினான்:

وَلاَ تَقُولُوا لِمَنْ يُقْتَلُ فِي سَبِيلِ اللهِ أَمْوَاتٌ بَلْ أَحْيَاءٌ وَلَكِنْ لاَ تَشْعُرُونَ

இறைவழியில் கொல்லப்பட்டோரை இறந்தவர்களென கூறாதீர்கள்! மாறாக உயிருள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆனால், நீங்கள் உணர மாட்டீர்கள்.

*(அல்குர்ஆன் 2:154)*

وَلاَ تَحْسَبَنَّ الَّذِينَ قُتِلُوا فِي سَبِيلِ اللهِ أَمْوَاتًا بَلْ أَحْيَاءٌ عِنْدَ رَبِّهِمْ يُرْزَقُونَ

இறைவழியில் கொல்லப்பட்டோரை இறந்தவர்களென உள்ளத்தாலும் எண்ணாதீர்கள்! மாறாக (அவர்கள்) உயிருள்ளவர்கள். அவர்களின் இறைவனிடத்தில் உணவளிக்கப்படுகிறார்கள்.

*(அல்குர்ஆன் 3:169)*

مَنْ عَمِلَ صَالِحًا مِنْ ذَكَرٍ أَوْ أُنْثَى وَهُوَ مُؤْمِنٌ فَلَنُحْيِيَنَّهُ حَيَاةً طَيِّبَةً
وَلَنَجْزِيَنَّهُمْ أَجْرَهُمْ بِأَحْسَنِ مَا كَانُوا يَعْمَلُونَ

இறைநம்பிக்கை கொண்டு நற்காரியம் ஆற்றுபவர் ஆணாக அல்லது பெண்ணாக இருப்பினும் திண்ணமாக அவருக்கு அழகிய வாழ்வை வழங்கி வாழச் செய்வோம். அவர்கள் ஆற்றிய நற்செயலுக்காக அவர்களின் கூலியை அவர்களுக்கு நிச்சயமாக வழங்குவோம். *(அல்குர்ஆன் 16:97)*

## மண் தீண்டா புனித உடல்

عَنْ أَبِي الدَّرْدَاءِ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَكْثِرُوا الصَّلَاةَ عَلَيَّ يَوْمَ الْجُمُعَةِ فَإِنَّهُ مَشْهُودٌ تَشْهَدُهُ الْمَلَائِكَةُ وَإِنَّ أَحَدًا لَنْ يُصَلِّيَ عَلَيَّ إِلاَّ عُرِضَتْ عَلَيَّ صَلاَتُهُ حَتَّى يَفْرُغَ مِنْهَا قَالَ قُلْتُ وَبَعْدَ الْمَوْتِ قَالَ وَبَعْدَ الْمَوْتِ إِنَّ اللَّهَ حَرَّمَ عَلَى الأَرْضِ أَنْ تَأْكُلَ أَجْسَادَ الأَنْبِيَاءِ فَنَبِيُّ اللَّهِ حَيٌّ يُرْزَقُ (ابن ماجه)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றார்கள்:

வெள்ளிக் கிழமையன்று என்மீது சலவாத் கூறுவதை அதிகமாக்குங்கள்! ஒருவர் என்மீது சலவாத்

பொருளடக்கம்
[illegible]யாக அது எனக்கு எடுத்துக்காட்டப்படுகிறது.

மரணத்திற்குப் பிறகு எவ்வாறு எடுத்துக் காட்டப்படுமென நான் கேட்டபோது இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் பதிலளித்தார்கள்:

திண்ணமாக இறைவன் நபிமார்களின் (புனித) உடல்களை தின்பதை மண்ணுக்கு ஹராமாக்கி விட்டான். ஏனென்றால், அல்லாஹ்வின் நபி உயிருடன் இருப்பார். உணவளிக்கப்படுவார்.

*அறிவிப்பாளர்: அபுத் தர்தா (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: இப்னுமாஜா எண் 1627.*

நுபுவ்வத் பெற்ற இறைத்தூதர்களின் புனித உடல்களை மண் தீண்டாதென்பதைப் போலவே விலாயத் பெற்ற இறை நேசர்களின் உயர்வுமிக்க உடல்களையும் தீண்டாது. இதை கீழ்க்காணும் ஹதீஸ்களின் மூலம் தெரிந்துகொள்ள முடியும்.

عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ لَمَّا حَضَرَ أُحُدٌ دَعَانِي أَبِي مِنَ اللَّيْلِ فَقَالَ مَا أُرَانِي إِلاَّ مَقْتُولاً فِي أَوَّلِ مَنْ يُقْتَلُ مِنْ أَصْحَابِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَإِنِّي لاَ أَتْرُكُ بَعْدِي أَعَزَّ عَلَيَّ مِنْكَ غَيْرَ نَفْسِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَإِنَّ عَلَيَّ دَيْنًا فَاقْضِ وَاسْتَوْصِ بِأَخَوَاتِكَ خَيْرًا فَأَصْبَحْنَا فَكَانَ أَوَّلَ قَتِيلٍ وَدُفِنَ مَعَهُ آخَرُ فِي قَبْرٍ ثُمَّ لَمْ تَطِبْ نَفْسِي أَنْ أَتْرُكَهُ مَعَ الآخَرِ فَاسْتَخْرَجْتُهُ بَعْدَ سِتَّةِ أَشْهُرٍ فَإِذَا هُوَ كَيَوْمِ وَضَعْتُهُ هُنَيَّةً غَيْرَ أُذُنِه (البخاري)

ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

உஹுத் போரின்போது இரவு நேரம் எனது தந்தை யார் என்னையழைத்துக் கூறினார்கள்:

(மகனே! நடைபெறவுள்ள யுத்தத்தில்) கொல்லப் படும் நபித்தோழர்களில் முதல் நபராக நானிருப்பேன் எனக் கருதுகிறேன். எனக்கு கடன் உண்டு. அதை அடைத்துவிடு! உன் சகோதரிகளை நன்முறையில் கவனித்துக்கொள்!

அடுத்த நாள் காலை யுத்தம் நடைபெற்றது. முதலா வதாக என் தந்தை ஷஹீதாக்கப்பட்டார்கள். என் தந்தையுடன் இன்னொருவரையும் நல்லடக்கம் செய்யப்பட்டது. இதை என்மனம் ஒத்துக் கொள்ள வில்லை. (எனவே, வேறொரு இடத்தில் நல்லடக்கம் செய்வதற்காக) ஆறுமாதங்கள் கழித்து என் தந்தை யின் உடலை கப்ரிலிருந்து வெளியே எடுத்தேன். அப்போது அந்த உடல் எந்த சிதைவுமில்லாமல் அன்றைய தினம் வைத்ததைப் போன்றிருந்தது.

*–நூல்: புகாரீ எண் 1351*

عَنْ هِشَامِ بْنِ عُرْوَةَ عَنْ أَبِيهِ لَمَّا سَقَطَ عَلَيْهِمْ الْحَائِطُ فِي زَمَانِ الْوَلِيدِ بْنِ عَبْدِ الْمَلِكِ أَخَذُوا فِي بِنَائِهِ
فَبَدَتْ لَهُمْ قَدَمٌ فَفَزِعُوا وَظَنُّوا أَنَّهَا قَدَمُ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَمَا وَجَدُوا أَحَدًا يَعْلَمُ ذَلِكَ حَتَّى قَالَ
لَهُمْ عُرْوَةُ لَا وَاللَّهِ مَا هِيَ قَدَمُ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَا هِيَ إِلَّا قَدَمُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ

வலீத் இப்னு அப்தில் மலிக் அவர்களின் ஆட்சிக் காலத்தில் (ரவ்ழா ஷரீஃபின்) சுற்றுச் சுவர் விழுந்து அதை புணர் நிர்மாணம் செய்யும் பணி நடை பெற்றது. ஒரு கால்பாதம் தென்பட்டபோது பணியி லிருந்தவர்கள் திடுக்கம் அடைந்துவிட்டார்கள். நபிகளாரின் பாதமாக இருக்கலாமென கருதினார்கள்.

அதைத் தெரிந்தவர்கள் யாருமில்லை. பிறகு உர்வா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அதைப் பார்த்து விட்டுச் சொன்னார்கள். இறைவனின் மீது ஆணை யிட்டுக் கூறுகிறேன். இது நபிகளாரின் பாதமல்ல. ஹழ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் பாதமே.

*அறிவிப்பாளர்: உர்வா (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: புகாரீ எண் 1390*

ஹழ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஹிஜ்ரீ இருபத்தி மூன்றாம் ஆண்டில் இவ்வுலகை விட்டும் மறைந்தார்கள். ஹிஜ்ரீ என்பத்தி ஆறாம் ஆண்டில் வலீத் இப்னு அப்தில் மலிக் ஆட்சிப் பொறுப்பை ஏற்கிறார். அப்படியானால் ஏறத்தாழ அறுபத்தி மூன்று ஆண்டுகளுக்கு மேலாகியும் உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் புனித உடல் அழியாமல் இறைவனால் பாதுகாக்கப்படிருக்கிறது என்பதை மேற்கண்ட ஹதீஸ் தெள்ளத் தெளிவாக அறிவிக்கிறது.

## மண்ணறையில் தொழுகை:

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ أَتَيْتُ وَفِي رِوَايَةِ هَدَّابٍ مَرَرْتُ
عَلَى مُوسَى لَيْلَةَ أُسْرِيَ بِي عِنْدَ الْكَثِيبِ الأَحْمَرِ وَهُوَ قَائِمٌ يُصَلِّي فِي قَبْرِهِ (مسلم)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றார்கள்: நான் மிஃராஜ் பயணத்தை மேற்கொண்ட இரவில் மூசா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை கடந்துசென்றேன். அவர்கள் தமது கப்ரில் நின்ற வண்ணம் தொழுது கொண்டிருந்தார்கள்.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: முஸ்லிம் எண் 4379*

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ قَالَ قَالَ رَسُولَ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَلأَنْبِيَاءُ أَحْيَاءٌ فِي قُبُورِهِمْ يُصَلُّونَ (أبويعلى)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றார்கள்: நபிமார்கள் உயிருடன் உள்ளார்கள். அவர்களின் கப்ருகளில் தொழுது கொண்டிருக்கிறார்கள்.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: அபூயஃலா எண் 3425, பஸ்ஸார் எண் 6391*

## கப்ரில் குர்ஆன்:

عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ ضَرَبَ بَعْضُ أَصْحَابِ النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ خِبَاءَهُ عَلَى قَبْرٍ وَهُوَ لاَ يَحْسَبُ أَنَّهُ قَبْرٌ فَإِذَا فِيهِ إِنْسَانٌ يَقْرَأُ سُورَةَ تَبَارَكَ الَّذِي بِيَدِهِ الْمُلْكُ حَتَّى خَتَمَهَا فَأَتَى النَّبِيَّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ يَا رَسُولَ اللّٰهِ إِنِّي ضَرَبْتُ خِبَائِي عَلَى قَبْرٍ وَأَنَا لاَ أَحْسَبُ أَنَّهُ قَبْرٌ فَإِذَا فِيهِ إِنْسَانٌ يَقْرَأُ سُورَةَ تَبَارَكَ الْمُلْكُ حَتَّى خَتَمَهَا فَقَالَ رَسُولُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ هِيَ الْمَانِعَةُ هِيَ الْمُنْجِيَةُ تُنْجِيهِ مِنْ عَذَابِ الْقَبْرِ (الترمذي)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடம் ஒரு தோழர் வந்து சொன்னார்: யா ரஸூலல்லாஹ்! ஒரு கப்ருக்கு மேலே அது கப்ர் என தெரியாமல் கூடாரம் அமைத்துத் தங்கினேன். அப்போது கப்ருக்குள்ளேயிருந்தவர் முல்க் அத்தியாயத்தை முழுமையாக ஓதினார்.

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றார்கள்: அந்த (முல்க்) அத்தியாயம் (நரக வேதனையை) தடுக்கும். ஈடேற்றத்தைக் கொடுக்கும்.

*அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: திர்மிதீ எண் 2815*

## இவ்வுலகிற்கு வருகை தரும் இறை நேசர்கள்:

عَنْ ابْنِ عَبَّاسٍ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَرَّ بِوَادِي الْأَزْرَقِ فَقَالَ أَيُّ وَادٍ هَذَا فَقَالُوا هَذَا وَادِي الْأَزْرَقِ قَالَ كَأَنِّي أَنْظُرُ إِلَى مُوسَى عَلَيْهِ السَّلَام هَابِطًا مِنْ الثَّنِيَّةِ وَلَهُ جُؤَارٌ إِلَى اللَّهِ بِالتَّلْبِيَةِ ثُمَّ أَتَى عَلَى ثَنِيَّةِ هَرْشَى فَقَالَ أَيُّ ثَنِيَّةٍ هَذِهِ قَالُوا ثَنِيَّةُ هَرْشَى قَالَ كَأَنِّي أَنْظُرُ إِلَى يُونُسَ بْنِ مَتَّى عَلَيْهِ السَّلَام عَلَى نَاقَةٍ حَمْرَاءَ جَعْدَةٍ عَلَيْهِ جُبَّةٌ مِنْ صُوفٍ خِطَامُ نَاقَتِهِ خُلْبَةٌ وَهُوَ يُلَبِّي (مسلم)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் (தங்களது ஒரு பயணத்தில்) அஜ்ரக் ஓடையை கடந்து சென்றபோது, இது என்ன ஓடை? எனக் கேட்டார்கள். ஸஹாபா பெருமக்கள் இது அஜ்ரக் ஓடையென்று பதிலளித்தார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்:

மலைப் பாதையிலிருந்து இறங்கிவரும் மூசா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை திண்ணமாக நான் காண்கிறேன். அவர்கள் தல்பியாவை சப்தமிட்டுக் கூறுகிறார்கள்.

பிறகு இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் ஹர்ஷா எனும் மலைப் பாதையை கடந்து சென்ற சமயத்தில், இது என்ன மலைப் பாதை யென கேட்டார்கள். ஹர்ஷா மலைப் பாதையென்று அருமைத் தோழர்கள் பதிலுரைத்தார்கள். இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அச்சமயத்தில் கூறினார்கள்:

திண்ணமாக யூனுஸ் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை நான் பார்க்கிறேன். கொளுத்த சிவப்பு நிறம் கொண்ட ஒட்டகையின்மீது அமர்ந்திருக்கிறார்கள்.

கம்பளியினாலான ஜுப்பா அணிந்துள்ளார்கள். அவர்களின் ஒட்டகத்துடைய தும்புக்கயிறு நாறினால் திரிக்கப்பட்டது. தல்பியா சொன்ன வண்ணமாக செல்கிறார்கள்.

*அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: முஸ்லிம் எண் 241*

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ... وَقَدْ رَأَيْتُنِي فِي جَمَاعَةٍ مِنْ الْأَنْبِيَاءِ فَإِذَا مُوسَى قَائِمٌ يُصَلِّي فَإِذَا رَجُلٌ ضَرْبٌ جَعْدٌ كَأَنَّهُ مِنْ رِجَالِ شَنُوءَةَ وَإِذَا عِيسَى ابْنُ مَرْيَمَ عَلَيْهِ السَّلَام قَائِمٌ يُصَلِّي أَقْرَبُ النَّاسِ بِهِ شَبَهًا عُرْوَةُ بْنُ مَسْعُودٍ الثَّقَفِيُّ وَإِذَا إِبْرَاهِيمُ عَلَيْهِ السَّلَام قَائِمٌ يُصَلِّي أَشْبَهُ النَّاسِ بِهِ صَاحِبُكُمْ يَعْنِي نَفْسَهُ فَحَانَتْ الصَّلَاةُ فَأَمَمْتُهُمْ (مسلم)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மொழிந்தார்கள்: விண்ணுலப் பயணத்தின் போது பைத்துல் முகத்தஸ் சென்றேன். எல்லா நபிமார்களையும் பார்த்தேன். தொழுகையின் நேரம் வந்தவுடன் அவர்களுக்கு இமாமாக இருந்து தொழுகை நடத்தினேன்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: முஸ்லிம் எண் 251*

மக்கள் பார்வையை விட்டும் மறைந்த நபிமார்கள், பைத்துல் முகத்தஸிற்கு வந்திருக்கிறார்கள். தொழுதுமிருக்கிறார்கள். அதேபோன்று ஹஜ் செய்வதற்காகவும் இம்மண்ணுலகிற்கு வந்திருக்கிறார்கள். ஆலமுல் பர்ஸகிற்கு சென்ற நபிமார்களால் இவ்வுலகிற்கு வந்துபோக முடியுமென்பதை மேற்கண்ட ஹதீஸ்கள் மெய்ப்பித்துக் காட்டுகின்றன.

## மறைந்த நல்லோர்களின் வாழ்த்தும் பிரார்த் தனையும்

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ قَالَ كَانَ أَبُو ذَرٍّ يُحَدِّثُ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ ... فَلَمَّا فَتَحَ عَلَوْنَا السَّمَاءَ الدُّنْيَا فَإِذَا رَجُلٌ قَاعِدٌ ... فَقَالَ مَرْحَبًا بِالنَّبِيِّ الصَّالِحِ وَالِابْنِ الصَّالِحِ قُلْتُ لِجِبْرِيلَ مَنْ هَذَا قَالَ هَذَا آدَمُ ... حَتَّى عَرَجَ بِي إِلَى السَّمَاءِ الثَّانِيَةِ ... فَلَمَّا مَرَّ جِبْرِيلُ بِالنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِإِدْرِيسَ قَالَ مَرْحَبًا بِالنَّبِيِّ الصَّالِحِ وَالْأَخِ الصَّالِحِ فَقُلْتُ مَنْ هَذَا قَالَ هَذَا إِدْرِيسُ ثُمَّ مَرَرْتُ بِمُوسَى فَقَالَ مَرْحَبًا بِالنَّبِيِّ الصَّالِحِ وَالْأَخِ الصَّالِحِ قُلْتُ مَنْ هَذَا قَالَ هَذَا مُوسَى ثُمَّ مَرَرْتُ بِعِيسَى فَقَالَ مَرْحَبًا بِالْأَخِ الصَّالِحِ وَالنَّبِيِّ الصَّالِحِ قُلْتُ مَنْ هَذَا قَالَ هَذَا عِيسَى ثُمَّ مَرَرْتُ بِإِبْرَاهِيمَ فَقَالَ مَرْحَبًا بِالنَّبِيِّ الصَّالِحِ وَالِابْنِ الصَّالِحِ قُلْتُ مَنْ هَذَا قَالَ هَذَا إِبْرَاهِيمُ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ... (البخاري)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இயம்பினார்கள்:

நான் விண்ணுலப் பயணம் மேற்கொண்டிருந்த சமயம் ஒவ்வொரு வானத்திற்கும் சென்றபோது. ஸாலிஹான நபிக்கு நல்வாழ்த்து; ஸாலிஹான சகோதரருக்கு நல் வாழ்த்து என்று அங்கிருந்த நபிமார்கள் என்னை வாழ்த்தினார்கள்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரீ எண் 349, முஸ்லிம் எண் 237.*

عَنْ أَنَسِ بْنَ مَالِكٍ يَقُولُ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ أَعْمَالَكُمْ تُعْرَضُ عَلَى أَقَارِبِكُمْ وَعَشَائِرِكُمْ مِنَ الْأَمْوَاتِ فَإِنْ كَانَ خَيْرًا اسْتَبْشَرُوا بِهِ وَإِنْ كَانَ غَيْرَ ذَلِكَ قَالُوا اللَّهُمَّ لَا تُمِتْهُمْ حَتَّى تَهْدِيَهُمْ كَمَا هَدَيْتَنَا (أحمد)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்)

அவர்கள் சொன்னார்கள்:

உங்கள் செயல்பாடுகள் இறந்துவிட்ட உங்கள் குடும்பத்தினருக்கும் உறவினர்களுக்கும் எடுத்துக் காட்டப்படுகின்றன. அவை நல்லதாகயிருந்தால் அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். தீயதாகயிருந்தால் பிரார்த்தனை செய்கிறார்கள்: இறைவனே! எங்களுக்கு நல்வழி காட்டியதுபோல அவர்களுக்கும் நேர்வழி காட்டு! அதுவரை அவர்களுக்கு மரணத்தை கொடுத்து விடாதே!

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹுு அன்ஹு), நூல்: அஹ்மத் எண் 12222.*

## சலாமும் சலாமுக்கு பதிலும்:

عَنْ ابْنِ مَسْعُودٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَقِيتُ إِبْرَاهِيمَ لَيْلَةَ أُسْرِيَ بِي فَقَالَ يَا مُحَمَّدُ أَقْرِئْ أُمَّتَكَ مِنِّي السَّلَامَ (الترمذي)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம்) அவர்கள் உரைத்தார்கள்:

விண்வெளிப் பயணத்தின்போது இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை சந்தித்தேன். அவர்கள் கூறினார்கள்: முஹம்மதே! உங்கள் உம்மத்தினருக்கு எனது சலாமை தெரியப்படுத்துங்கள்!

*அறிவிப்பாளர்: இப்னு மஸ்வூத் (ரலியல்லாஹுு அன்ஹு), நூல்: திர்மிதீ எண் 3384*

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ مَا مِنْ أَحَدٍ يُسَلِّمُ عَلَيَّ إِلاَّ رَدَّ اللَّهُ عَلَيَّ رُوحِي حَتَّى أَرُدَّ عَلَيْهِ السَّلاَمَ (أبوداود)

இறைத்தூதர் (ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம்)

அவர்கள் இயம்பினார்கள்:

ஒருவர் என் மீது சலாம் கூறினால் இறைவன் எனது ரூஹை எனக்கு மீட்டிக் கொடுக்கிறான். ஆகவே, அவருக்கு பதில் சலாம் நான் கூறுகிறேன்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: அபூதாவூத் எண் 1745*

عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ كَعْبِ بْنِ مَالِكٍ عَنْ أَبِيهِ قَالَ لَمَّا حَضَرَتْ كَعْبًا الْوَفَاةُ أَتَتْهُ أُمُّ بِشْرٍ بِنْتُ الْبَرَاءِ بْنِ مَعْرُورٍ فَقَالَتْ يَا أَبَا عَبْدِ الرَّحْمَنِ إِنْ لَقِيتَ فُلَانًا فَاقْرَأْ عَلَيْهِ مِنِّي السَّلَامَ قَالَ غَفَرَ اللَّهُ لَكِ يَا أُمَّ بِشْرٍ نَحْنُ أَشْغَلُ مِنْ ذَلِكَ قَالَتْ يَا أَبَا عَبْدِ الرَّحْمَنِ أَمَا سَمِعْتَ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ إِنَّ أَرْوَاحَ الْمُؤْمِنِينَ فِي طَيْرٍ خُضْرٍ تَعْلُقُ بِشَجَرِ الْجَنَّةِ قَالَ بَلَى قَالَتْ فَهُوَ ذَاكَ (ابن ماجه)

கஃப் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு மரண நிலை ஏற்பட்டபோது அங்கே வருகை புரிந்த உம்மு பிஷ்ர் (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் கூறினார்கள்:

கஃப் அவர்களே! இன்ன மனிதரை நீங்கள் சந்தித்தால் அவருக்கு நான் சலாம் கூறியதாக சொல்லுங்கள்!

கஃப் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் சொன்னார்கள்: உம்மு பிஷ்ர் அவர்களே! அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக! அங்குள்ள சூழ்நிலையில் இது எவ்வாறு சாத்தியமாகும்?

உம்மு பிஷ்ர் (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் பதிலுக்கு சொன்னார்கள்: கஃப் அவர்களே! இறைத்தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறியதை நீங்கள் கேட்டதில்லையா? அவர்கள் சொன்னார்கள்: நிச்சயமாக இறைநம்பிக்கையாளர்களின் ரூஹ்கள் பச்சை நிற பறவையில் வைக்கப்பட்டு சுவனத்து மரங்களில் தொங்கிக்கொண்டிருக்கும்.

இதைக்கேட்ட கஃப் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள், ஆம் என கூறியபோது, அதனால் நான் சலாம் சொல்லி அனுப்புகிறேன் என்றார்கள் உம்மு பிஷ்ர் (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள்.

*அறிவிப்பாளர்: கஃப் இப்னு மாலிக் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: இப்னுமாஜா எண் 1439*

عَنْ مُحَمَّدِ بْنِ الْمُنْكَدِرِ قَالَ دَخَلْتُ عَلَى جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ وَهُوَ يَمُوتُ فَقُلْتُ اقْرَأْ عَلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ السَّلَامَ (ابن ماجه)

ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் மரணத் தருவாயிலிருந்தபோது அவர்களை சந்தித்து இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு என் சலாம் கூறுங்கள்! என்ற கோரிக்கையை வைத்தேன்.

*அறிவிப்பாளர்: முஹம்மது இப்னு முன்கதிர் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: இப்னுமாஜா எண் 1440*

## இறந்தோரின் சந்திப்பு:

عن أبي قتادة، عن النبي صلى الله عليه وسلم قال: "من ولي أخاه فليحسن كفنه، فإنهم يتزاورون فيها (البيهقي في شعب الإيمان)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

உங்கள் சகோதரர் இறந்துவிட்டால் அவருக்கு அழகிய கஃபன் துணியை உபயோகியுங்கள். ஏனென்றால், இறந்து போனவர்கள் கஃபன் துணியை அணிந்த நிலையிலேயே ஒருவருக்கொருவர் சந்தித்துக் கொள்கின்றனர்.

*அறிவிப்பாளர்: அபூகதாதா (ரலியல்லாஹு அன்ஹு),*
*நூல்: பைஹகீ (ஷுஃபுல் ஈமான்) எண் 9268*

عَنْ أَبِي هُرَيْرَةَ يَقُولُ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ احْتَجَّ آدَمُ وَمُوسَى فَقَالَ مُوسَى يَا آدَمُ أَنْتَ أَبُونَا خَيَّبْتَنَا وَأَخْرَجْتَنَا مِنْ الْجَنَّةِ فَقَالَ لَهُ آدَمُ أَنْتَ مُوسَى اصْطَفَاكَ اللَّهُ بِكَلَامِهِ وَخَطَّ لَكَ بِيَدِهِ أَتَلُومُنِي عَلَى أَمْرٍ قَدَّرَهُ اللَّهُ عَلَيَّ قَبْلَ أَنْ يَخْلُقَنِي بِأَرْبَعِينَ سَنَةً فَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَحَجَّ آدَمُ مُوسَى فَحَجَّ آدَمُ مُوسَى (مسلم)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நவின்றார்கள்:

ஆதம் அலைஹிஸ் ஸலாம் மற்றும் மூசா அலைஹிஸ்ஸலாம் ஆகிய இருவரும் தங்களுக்கு மத்தியில் விவாதம் செய்துகொண்டனர். மூசா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறினார்கள்:

ஆதம் அவர்களே! எங்களுக்குத் தந்தையாகவுள்ள நீங்கள் சொர்க்கத்திலிருந்து எங்களை வெளியேற்றி எங்களுக்கு இழப்பை ஏற்படுத்திவிட்டீர்கள்.

அவர்களுக்கு ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் பதிலுரைத்தார்கள்: மூசா அவர்களே! அல்லாஹ் உங்களுடன் நேரடியாக பேசியதன் மூலம் உங்களுக்கு சிறப்பளித்துள்ளான். என்னைப் படைப்பதற்கு நாற்பது வருடங்களுக்கு முன்பாகவே இறைவன் எழுதி வைத்ததைத்தான் நான் செய்தேன். எப்படி இதில் என்னை குறை காண்கிறீர்கள்?

நடந்த இவ்விவாதத்தில் ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் மூசா அலைஹிஸ் ஸலாம் அவர்களை வென்று விட்டார்களென்று இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

*அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: முஸ்லிம் எண் 4793*

## கேட்பதும் பார்ப்பதும்:

عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ الْعَبْدُ إِذَا وُضِعَ فِي قَبْرِهِ وَتُوُلِّيَ وَذَهَبَ أَصْحَابُهُ حَتَّى إِنَّهُ لَيَسْمَعُ قَرْعَ نِعَالِهِمْ ... (البخاري)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மொழிந்தார்கள்:

ஒரு மய்யித்தை அடக்கம் செய்துவிட்டு அடக்கம் செய்தவர்கள் திரும்பி வருகின்றபோது அவர்கள் நடப்பதால் எழுதுகின்ற காலணி சத்தத்தை திண்ண மாக மய்யித் கேட்கிறது.

*அறிவிப்பாளர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: புகாரீ எண் 1338.*

ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் அறி விக்கிறார்கள்:

عَنْ عَائِشَةَ قَالَتْ كُنْتُ أَدْخُلُ بَيْتِي الَّذِي دُفِنَ فِيهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَبِي فَأَضَعُ ثَوْبِي فَأَقُولُ إِنَّمَا هُوَ زَوْجِي وَأَبِي فَلَمَّا دُفِنَ عُمَرُ مَعَهُمْ فَوَاللَّهِ مَا دَخَلْتُ إِلاَّ وَأَنَا مَشْدُودَةٌ عَلَيَّ ثِيَابِي حَيَاءً مِنْ عُمَرَ (أحمد)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் என் தந்தையார் அவர்களையும் ஜியாரத் செய்வதற்காக செல்வேன். சாதாரணமாக உடைய ணிந்த நிலையில் செல்வேன். (மற்றவர்களிடம்) அங்கிருப்பது என் கணவரும் தந்தையும்தான் என் பேன்.

ஆனால், அங்கே உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட பிறகு, அல்லாஹ் வின் மீதாணையாக எனது ஆடைகளை நன்றாக அணிந்த வண்ணமே செல்வேன். உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு வெட்கப்பட்டதின் காரணமாக.

*அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா), நூல்: அஹ்மத் எண் 24480*

عَنْ عَمْرِو بْنِ حَزْمٍ قَالَ رَآنِي رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مُتَّكِئًا عَلَى قَبْرٍ فَقَالَ لَا تُؤْذِ صَاحِبَ هَذَا الْقَبْرِ (أحمد)

அம்ர் இப்னு ஹஸ்ம் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

ஒரு கப்ரின் மீது சாய்ந்த வண்ணம் நான் அமர்ந்திருந்ததை இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பார்த்துவிட்டார்கள். என்னிடம் சொன்னார்கள்.

இந்த கப்ருக்குள்ளே இருப்பவருக்கு நோவினை கொடுக்காதீர்கள்!

*அறிவிப்பாளர்: அம்ர் இப்னு ஹஸ்ம் (ரலியல்லாஹு அன்ஹு), நூல்: அஹ்மத் எண் 20931*

மிக மெல்லிய சத்தத்தையும் மய்யித் கேட்குமென் பதை தெரியப்படுத்தவே இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலணி சத்தத்தை உதாரணமாக காட்டுகிறார்கள். இல்லையெனில், காலணி சத்தத்தைக் கேட்பதால் மய்யித்திற்கு எப்பயனுமில்லை என்பது நாமறிந்ததே.

கப்ருக்குள்ளே இருப்பவர் கப்ரின் மேலே என்ன நிகழ்கிறது என்பதைப் பார்க்கிறார். தனது கப்ரின்

மீது பிறர் சாய்ந்திருப்பது தன்னை அவமரியாதை செய்வதாகுமென்று அவர் கருதுகிறார். அதனால் அவரது உள்ளம் வேதனைக்குள்ளாகிறது.

எனவேதான், அவரை நோவினை செய்யாதீர்க ளென்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தடுக்கிறார்கள்.

கப்ரின் மேல் என்ன நடக்கிறதென்பதை அவரால் காண இயலாதென்றால், அவரது உள்ளம் வேதனைப் படுவதற்கு வாய்ப்பில்லை. அவருக்கு நோவினை கொடுக்காதீர்கள் என்று சொல்ல வேண்டிய அவசிய மும் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்காது.

உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களுக்கு வெட்கமடைந்துதான் நன்றாக ஆடைகளை அணிந்து கொண்டு ஜியாரத்திற்கு சென்றதாக ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் கூறுகிறார்கள். அவர்களின் இக்கூற்று, கப்ருக்குள்ளேயிருப்பவர் தன்னை ஜியாரத் செய்ய வருவோரைப் பார்க்கிறார் என்பதை தெரியப்படுத்துகிறது.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இஸ்லாமிய பாடத்தை நேரடியாகப் பயின்ற ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) அவர் களைப் போன்ற ஸஹாபிகள் கூறுவதை ஏற்பதா? இவர்களுக்கு மாறாக மய்யித் கேட்காது, பார்க்காது எனக் கூறும் வஹ்ஹாபிகளை பின்பற்றுவதா?

ஸஹாபிகளை பின்பற்றுவோம்!

வஹ்ஹாபிகளை புறந்தள்ளுவோம்!!

# கரம் பிடித்து கரை சேர்வோம்

பைஅத் எனும் அரபிச் சொல்லுக்கு ஒப்பந்தம்-உடன்படிக்கை என்பது பொருளாகும். உள்ளத்தை தூய்மைப் படுத்தவும், இறைவனைப் பற்றிய அறிவைப் பெறவும் ஒரு ஞான ஆசிரியரின் கரம்பிடித்து பைஅத் பெறுவது அவசியமாகும். உள்ளங்களைத் தூய்மை யாக்குவதற்காகவே தூதர்களை அனுப்பி வைத்ததாக வும் அதில்தான் வெற்றியிருக்கிறதென்றும் இறைவன் குர்ஆன் ஷரீஃபில் தெளிவுபடுத்துகிறான்.

كَمَا أَرْسَلْنَا فِيكُمْ رَسُولاً مِنْكُمْ يَتْلُو عَلَيْكُمْ آيَاتِنَا وَيُزَكِّيكُمْ وَيُعَلِّمُكُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَيُعَلِّمُكُمْ مَا لَمْ تَكُونُوا تَعْلَمُونَ (البقرة)

உங்களிடமிருந்து ஒரு தூதரை உங்களுக்கு நாம் அனுப்பி வைத்தோம். அவர் நமது வசனங்களை உங்க ளுக்கு ஓதிக் காட்டுவார். உங்களை தூய்மைப்படுத்து வார். வேதத்தையும் ஞானத்தையும் உங்களுக்கு கற்றுக் கொடுப்பார். *(அல்குல்ஆன்: 2:151)*

قَدْ أَفْلَحَ مَنْ زَكَّاهَا * وَقَدْ خَابَ مَنْ دَسَّاهَا (الشمس)

ஆத்மாவை தூய்மைப்படுத்தியவன் நிச்சயமாக வெற்றியடைந்தான். அதை மாசுபடுத்தியவன் தோல்வி கண்டான். *(அல்குர்ஆன்: 91:9,10)*

وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْإِنْسَ إِلاَّ لِيَعْبُدُونِ (الذاريات)

மனித இனத்தையும் ஜின் இனத்தையும் என்னை வணங்குவதற்காகவே படைத்தேன். *(அல்குர்ஆன்: 51:56)*

இந்த வசனத்திலுள்ள லியஃபுதூன் என்ற வார்த்தை

யின் பொருள் லியஃரிஃபூன் (என்னை அறிந்து வணங்க) என்பதாகுமென இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள். இறைவனைப் பற்றிய ஞானத்தைப் பெறுவதற்கும் உளத் தூய்மையுடன் நேர்வழியை அடைவதற்கும் ஒரு ஞான ஆசிரியரின் கரம்பிடித்து செய்துகொள்கின்ற ஒப்பந்தத்திற்கே பைஅத் எனக் கூறப்படும்.

... الرَّحْمَنُ فَاسْأَلْ بِهِ خَبِيرًا (الفرقان)

ரஹ்மானைப் பற்றி தெரிந்தவர்களிடம் நீங்கள் கேட்டு அறிந்து கொள்ளுங்கள்! *(அல்குர்ஆன்: 25:59)*

## மன அமைதியும் ஈடில்லா வெற்றியும்

لَقَدْ رَضِيَ اللهُ عَنِ الْمُؤْمِنِينَ إِذْ يُبَايِعُونَكَ تَحْتَ الشَّجَرَةِ فَعَلِمَ مَا فِي قُلُوبِهِمْ فَأَنْزَلَ السَّكِينَةَ عَلَيْهِمْ وَأَثَابَهُمْ فَتْحًا قَرِيبًا (الفتح)

அந்த மரத்தின் கீழ் உங்களிடம் பைஅத் (ஒப்பந்தம்) எடுத்துக் கொண்ட இறைநம்பிக்கையாளர்களை அல்லாஹ் பொருந்திக் கொண்டான். அவர்களின் உள்ளங்களில் இருப்பதையும் அவன் அறிந்து கொண்டான். அவர்களின் மீது மன அமைதியை அருளினான். மேலும், அவர்களுக்கு அருகிலிருக்கும் வெற்றியை வழங்கினான். *(அல்குர்ஆன்: 48:18)*

## இறைத்தூதரின் பைஅத் இறைவனுடையதே

إِنَّ الَّذِينَ يُبَايِعُونَكَ إِنَّمَا يُبَايِعُونَ اللهَ يَدُ اللهِ فَوْقَ أَيْدِيهِمْ فَمَنْ نَكَثَ فَإِنَّمَا يَنْكُثُ عَلَى نَفْسِهِ وَمَنْ أَوْفَى بِمَا عَاهَدَ عَلَيْهُ اللهَ فَسَيُؤْتِيهِ أَجْرًا عَظِيمًا (الفتح)

உம்மிடம் பைஅத் (ஒப்பந்தம்) செய்தவர்கள் அல்லாஹ்விடம் பைஅத் செய்தவர்களாவார்கள். அவர்களுடைய கைகளுக்கு மேல் அல்லாஹ்வின் கை இருந்தது. யார் (அந்த பைஅத்தை) முறிக்கிறாரோ தனக்கெதிராகவே (அதை முறித்துக் கொள்கிறார். யார் அல்லாஹ்விடம் செய்து கொண்ட ஒப்பந்தத்தை நிறைவேற்றுகிறாரோ அவருக்கு அவன் மகத்தான கூலியைத் தருவான். *(அல்குர்ஆன்: 48:10)*

## நபித்தோழர்கள் பெற்ற பைஅத்

عَنْ جَرِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ يَقُولُ بَايَعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَلَى شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ وَإِقَامِ الصَّلاَةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالسَّمْعِ وَالطَّاعَةِ وَالنُّصْحِ لِكُلِّ مُسْلِمٍ (البخاري ومسلم)

ஜரீர் இப்னு அப்தில்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்:

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு எதுவுமில்லை–எவருமில்லை. மேலும், முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராக உள்ளார்கள் என்று சாட்சியம் பகர்வது, தொழுகையை நிலை நாட்டுவது, ஸகாத் கொடுப்பது, இஸ்லாமிய சட்ட திட்டங்களுக்கு கட்டுப்பட்டு நடப்பது, எல்லா முஸ்லிம்களுக்கும் அறிவுரை வழங்குவது.

ஆகியவற்றின் மீது இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பைஅத் பெற்றேன்.

*அறிவிப்பாளர்: ஜரீர் ரலியல்லாஹு அன்ஹு,*
*நூல்: புகாரீ எண்: 2157, முஸ்லிம் எண்: 85*

عَنْ عُبَادَةَ بْنِ الصَّامِتِ قَالَ دَعَانَا النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَبَايَعْنَاهُ فَقَالَ فِيمَا أَخَذَ عَلَيْنَا أَنْ بَايَعَنَا عَلَى السَّمْعِ وَالطَّاعَةِ فِي مَنْشَطِنَا وَمَكْرَهِنَا وَعُسْرِنَا وَيُسْرِنَا وَأَثَرَةً عَلَيْنَا وَأَنْ لاَ نُنَازِعَ الأَمْرَ أَهْلَهُ إِلاَّ أَنْ تَرَوْا كُفْرًا بَوَاحًا عِنْدَكُمْ مِنَ اللَّهِ فِيهِ بُرْهَانٌ (البخاري ومسلم)

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களை அழைத்தார்கள். அவர்களிடம் நாங்கள் பைஅத் பெற்றோம். மகிழ்ச்சி மற்றும் சிரம மான கட்டத்திலும், செல்வம் மற்றும் ஏழ்மையான நிலையிலும் இஸ்லாமிய சட்டதிட்டங்களுக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டும். பகிரங்கமான குஃப்ர் வெளிப்படாதவரை ஆட்சியாளர்களுக்கு எதிரான நிலைப்பாட்டை எடுக்கக் கூடாது. இவற்றின் மீது இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களுக்கு பைஅத் வழங்கினார்கள்.

*அறிவிப்பாளர்: உபாதா இப்னு ஸாமித் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரீ எண்: 7056, முஸ்லிம் எண்: 3427*

## சிறுவர்களுக்கு பைஅத் கொடுக்கலாமா?

عَنْ زُهْرَةَ بْنِ مَعْبَدٍ عن جده عبدالله بن هشام وَكَانَ قَدْ أَدْرَكَ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَذَهَبَتْ بِهِ أُمُّهُ زَيْنَبُ بِنْتُ حُمَيْدٍ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ يَا رَسُولَ اللَّهِ بَايِعْهُ فَقَالَ هُوَ صَغِيرٌ فَمَسَحَ رَأْسَهُ وَدَعَا لَهُ (البخاري)

ஜைனப் பின்த் ஹுமைத் ரலியல்லாஹு அன்ஹா தன் அருமை மகனார் அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்

ரலியல்லாஹு அன்ஹு அவர்களை இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அழைத்துச் சென்று, யா ரசூலல்லாஹ்! என் மகனுக்கு பைஅத் கொடுங்கள்! எனக் கூறினார்.

இவர் சிறுவராக இருக்கிறாரே எனக் கூறிய இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவருடைய தலையை தடவி விட்டு அவருக்காக துஆ செய்தார்கள்.

*அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரீ எண்: 2502*

عن عروة بن الزبير وفاطمة بنت المنذر بن الزبير أهما قالا خرجت أَسْمَاء بِنْت أَبِي بَكْرٍ حِينَ هَاجَرَتْ وَهِيَ حُبْلَى بِعَبْد اللَّه بْنِ الزُّبَيْرِ فَقَدِمَتْ قُبَاءً ... ثُمَّ قَالَتْ أَسْمَاءُ ثُمَّ مَسَحَهُ وَصَلَّى عَلَيْهِ وَسَمَّاهُ عَبْدَ اللَّه ثُمَّ جَاءَ وَهُوَ ابْنُ سَبْعِ سِنِينَ أَوْ ثَمَانٍ لِيُبَايِعَ رَسُولَ اللَّه صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَمَرَهُ بِذَلِكَ الزُّبَيْرُ فَتَبَسَّمَ رَسُولُ اللَّه صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ حِينَ رَآهُ مُقْبِلاً إِلَيْهِ ثُمَّ بَايَعَهُ (مسلم)

அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது வயது ஏழு அல்லது எட்டாக இருந்தபோது பைஅத் பெறுவதற்காக இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தார்கள். பைஅத் வாங்க வேண்டு மென்று அவரது தந்தை ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கட்டளையிட்டார்கள். அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தன்னை நோக்கி வருவதைக் கண்ட இறைத்தூதர் ஸல்லல்

லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள். அவர்களுக்கு பைஅத்தும் வழங்கினார்கள்.

*அறிவிப்பாளர்: உர்வா இப்னு ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: முஸ்லிம் எண்: 3998*

பருவமடையாத சிறுவர்கள் பைஅத் பெறுவது கட்டாயமில்லை என்பதை முதலாவது ஹதீஸ் அறிவிக்கிறது. அதே நேரத்தில் பரக்கத்தின் நிமித்தமாக சிறுவர்களுக்கு பைஅத் வழங்கலாம் என்பதை இரண்டாவது ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது.

## பெண்களுக்கு பைஅத்:

*இறைவன் கூறினான்:*

يَا أَيُّهَا النَّبِيُّ إِذَا جَاءَكَ الْمُؤْمِنَاتُ يُبَايِعْنَكَ عَلَى أَنْ لاَ يُشْرِكْنَ بِاللهِ
شَيْئًا وَلاَ يَسْرِقْنَ وَلاَ يَزْنِينَ وَلاَ يَقْتُلْنَ أَوْلاَدَهُنَّ وَلاَ يَأْتِينَ بِبُهْتَانٍ
يَفْتَرِينَهُ بَيْنَ أَيْدِيهِنَّ وَأَرْجُلِهِنَّ وَلاَ يَعْصِينَكَ فِي مَعْرُوفٍ فَبَايِعْهُنَّ
وَاسْتَغْفِرْ لَهُنَّ اللهَ إِنَّ اللهَ غَفُورٌ رَحِيمٌ (الممتحنة)

*நபியே! இறைநம்பிக்கையுள்ள பெண்கள் உங்களிடம் வந்து, இணை வைக்காமலிப்பது, திருடாமல் இருப்பது, விபசாரம் புரியாமலிருப்பது, தங்களின் குழந்தைகளை கொல்லாமலிருப்பது, பிறர் மீது வீண் பழி சுமத்தாமலிருப்பது ஆகியவற்றின் மீது பைஅத் கேட்டால் அப்பெண்களுக்கு பைஅத் செய்து கொடுங்கள்! அவர்களுக்காக பாவமன்னிப்புத் தேடுங்கள்! திண்ணமாக இறைவன் மன்னிப்பாளனாகவும் அன்பாளனாகவும் உள்ளான்.* *(அல்குர்ஆன்: 60:12)*

عن عائشة رضي الله عنها زوج النبي صلى الله عليه وسلم قالت كانت المؤمنات إذا هاجرن إلى النبي صلى الله عليه وسلم يمتحنهن بقول الله تعالى يا أيها الذين آمنوا إذا جاءكم المؤمنات مهاجرات فامتحنوهن إلى آخر الآية قالت عائشة فمن أقر بهذا الشرط من المؤمنات فقد أقر بالمحنة فكان رسول الله صلى الله عليه وسلم إذا أقررن بذلك من قولهن قال لهن رسول الله صلى الله عليه وسلم انطلقن فقد بايعتكن لا والله ما مست يد رسول الله صلى الله عليه وسلم يد امرأة قط غير أنه بايعهن بالكلام والله ما أخذ رسول الله صلى الله عليه وسلم على النساء إلا بما أمره الله يقول لهن إذا أخذ عليهن قد بايعتكن كلاما (البخاري ومسلم)

இறைநம்பிக்கையுள்ள பெண்கள் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வருகை தந்தபோது அப்பெண்களை பரிசோதித்தபின் அவர்களுக்குக் கூறினார்கள்:

(பெண்களே!) நீங்கள் செல்லுங்கள்! உங்களுக்கு நான் பைஅத் தந்துவிட்டேன்.

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எப்பெண்ணுடைய கையையும் தொட்டதில்லை. வார்த்தைகளைக் கொண்டு மட்டுமே பைஅத் வழங்குவார்கள். இது அல்லாஹ்வின் மீதாணை.

*அறிவிப்பாளர்: ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா,*
*நூல்: புகாரீ எண்: 5288, முஸ்லிம் எண்: 3470*